| | |
|---|---|
| भक्तिसुधातरङ्गिणी BHAKTISUDHATARANGINI or The Works of Sri Sachidananda Sivabhinava Nrisimha Bharati Swamigal, the late Mahaswamigal of Sringeri. With several half-tone illustrations, Edition De Luxe | 10—0—0 |
| do. Ordinary Edition | 2—8—0 |
| गुरुवंशकाव्यम् १—७ सर्गाः | 1—8—0 |
| गुरुत्रयाष्टोत्तरशतनामस्तोत्रम् | 0—4—0 |
| Life of His Holiness Sri Sachidananda Siva Abhinava Nrisimha Bharati Swamigal, Jagadguru of Sringeri | 1—8—0 |
| The Greatness of Sringeri | 0—12—0 |
| The Saint of Sringeri, Sri Jagadguru Sri Chandrasekhara Bharati Swaminah —A short Life-Sketch | 0—12—0 |
| Dialogues with the Guru by Sri R. Krishnaswamy Aiyar, M.A., B.L. pp. 182 + xii | 5—0—0 |
| ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்ய சரித்திரம் | 1—0—0 |
| ஸ்ரீ குருராஜ வைபவம் (ஸ்ரீ ஜகத்குரு சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் சரித்திரம் 3-ம் பதிப்பு) | 0—12—0 |
| அமிருத மொழிகள் (ஷியார்கள் அருளியது) | 2—0—0 |
| ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் சரித்திரம் | 0—12—0 |
| ஸ்ரீ ராமாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் சரித்திரம் | 1—0—0 |

உ



# ஸ்ரீ சிருங்ககிரி மஹிமை



திருநெல்வேலி

R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் M. A., B. L.,

அவர்கள் இயற்றியது.

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்

ஸ்ரீரங்கம்

1957

அணா 12] [தபால் வேறு

## விஷய ஸூசிகை



॥ श्रीगुरुभ्यो नमः ॥

सदाशिवसमारम्भां शंकराचार्यमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरंपराम् ॥

नारायणं पद्मभुवं वसिष्ठं
शक्तिं च तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं
गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम् ॥

श्रीशंकराचार्यमथास्य पद्म-
पादं च हस्तामलकं च शिष्यम् ।
तं तोटकं वार्तिककारमन्या-
नस्मद्गुरून् संततमानतोऽस्मि ॥



## ॥ श्रीशारदास्तुतिः ॥

### श्रीमदाचार्यपादैः कृता ।

कल्याणानि तनोतु काऽपि तरुणी शृङ्गाद्रिभूषायिता
श्रीमच्छङ्करदेशिकेन्द्रकलितं चक्रं सदाधिष्ठिता ।
दूरस्थामपि पादनम्रजनतां विद्यायुरारोग्यस-
त्सन्तत्यादिमनोरथाप्तिसहितां संतन्वती सत्वरम् ॥

बन्धुवरालिः रागः ] [ आदिताळः

शारदाम्ब शरदिन्दुनिभाननभासितनिखिलदिगन्ते ।
पारद भवमहाजलराशेः पावय मां विधिकान्ते ॥ १ ॥

दन्तकान्तिजितकुन्दसुमे वरकुन्तळनिर्धुतभृङ्गे ।
शान्तचित्तजनसंततचिन्तितकोटिचन्द्रसदृशाङ्गे ॥ २ ॥

पादनम्रजनवाञ्छितपूरणनिर्जितनन्दनवल्लिके ।
मादनेष्वसनगर्वनिबर्हणदक्षमनोहरचिल्लिके ॥ ३ ॥

ऋश्यशृङ्गपुरवासविलोले वश्ययन्त्रसदृशास्ये ।
पश्यदङ्घ्रिशुकदेवहूतिसुतकश्यपादिसमुपास्ये ॥ ४ ॥



௨

# ஸ்ரீ சிருங்ககிரி மஹிமை

## அத்யாயம் 1

### சிருங்ககிரி

ஸ்ரீமந்நாராயணர் ஜகந்நியந்தாவென்ற முறையில் சிஷ்டபரிபாலனம் துஷ்ட நிக்ரஹம் செய்து தர்ம ரக்ஷணம் செய்யவேண்டிய பொறுப்பை வஹித்து இப்புவியில் ஸ்ரீ ராமபிரானுக அவதரிக்க உத்தேசித்த ஸமயம் அயோத்யாதிபதியான தசரத மஹாராஜன் அசுவமேத யாகம் செய்து ரிஷ்ய சிருங்க மஹாமுனிவரின் அனுக்ரஹத்தினுல் புத்திர காமேஷ்டி நடத்தி அப்பகவானையே புத்திரனுக அடைந்தாரென்கிற விஷயம் யாவரும் அறிந்ததே. அம்முனிவர் விபண்டக மஹரிஷிக்கு ஓர் மானிடம் ஜனித்து அம்மஹரிஷியால் மிகவும் அன்புடன் வளர்க்கப்பட்டு வந்தார். மனதில் காமவேகம் தோன்றி மனது கெட்டு விடாமலிருக்க பெண்களைப் பார்க்காமலே இருப்பது நல்லதென்ற எண்ணத்தால் தன் பையனுக்கு ஆண் பெண் என்ற இருவகையுண்டென்று கூடத் தெரியவொட்டாமலே வளர்த்து வந்தார். ரோமபாதராஜன் அரசாண்டு வந்த அங்க தேசத்தில் அனுவிருஷ்டியால் க்ஷாமம் ஏற்பட்டு ஜனங்கள் வெகு வருஷங்கள் கஷ்டப்பட, இப்பரிசுத்தமான வாலிபரின் பாததூளி தன் தேசத்தில்

பட்டால் மழை பெய்யுமென்று பெரியோர் சொல்லக் கேட்டு, இவரை எப்படியாவது அழைத்து வரவேண்டு மென்று இவ்வாசிரமத்திற்கு அழகு வாய்ந்த சில வேசிய ஸ்திரீகளை அனுப்பினர். இவர்கள் விபண்ட கர் இல்லாத ஸமயம் இங்கே வந்ததும், இவர்களும் ஏதோ தபஸ்விகளென்று ரிஷ்யசிருங்கர் உபசரித்து அவர்களுடைய கேசபாசங்களைக் கண்டு ஜடை நன்ரு யிருக்கிறதென்றும் அவர்கள் கொடுத்த பக்ஷணங்களை புதிதான பழவகை யென்றும் நினைத்து ஸந்தோஷித் தார். விபண்டகர் திருஷ்டியில் படாமலே போய்விட வேண்டுமென்று அவர்கள் அவஸரமாகவே திரும்பி விட்டார்கள். ஆனல் அவர்களிடத்தில் இப்பாலக ருக்குத் தன்னைத் தெரியாமல் ஓர் அன்பு ஏற்பட்டு விட்டபடியால் மறுநாள் அவர்களைத் தேடிக்கொண்டு தானகவே எல்லைக்கு வெளியில் சென்ருர். இவர் ஸமீபத்தில் வரவே இதுவரை காணுத மழை சொரிந்து அங்க தேசத்திற்கு உயிர் பிச்சை கொடுத்தது. அங்க ராஜனும் எதிர்கொண்டழைத்துச் சென்று தன் அரண்மனையில் இவருக்கு விசேஷமான உபசாரங்களை செய்ததுடன் தன் புதல்வி சாந்தா என்பவளை இவ ருக்கு விவாஹம் செய்து கொடுத்தார். இவ்விதம் அங்கு தங்கியிருக்கும் ஸமயம் தான் தசரத மஹா ராஜன் வேண்டுகோளின் பேரில் அயோத்தியை எய்து ஸ்ரீ ராமபிரானின் அவதாரத்திற்கு உதவியாயிருந்தது. பின்னல் இம்முனிவர் தன் ஸ்வபாவத்திற்கு அனு குணமான அரண்யவாஸமே சிலாக்யமென்று தீர்மா

னித்து தன் ஆசிரமத்திற்குத் திரும்பி விட்டார். இந்த விபண்டக மஹாமுனிவர் ஆசிரமம் தான் ரிஷ்ய சிருங்கர் இளமையில் வளர்ந்த ஸ்தலமானதினுல் ரிஷ்ய சிருங்ககிரி என்ற பெயரை அடைந்தது. சுறுங்கச் சொல்லில், சிருங்ககிரி ஆகிவிட்டது. இன்னமும் தேச பாஷையில் மறுவி சிருங்கேரி என்ற பெயரையும் அடைந்தது. விபண்டகர் உபாஸித்து ஐக்யமான லிங்கம் சிருங்கேரி கிராம மத்தியிலுள்ள குன்றின் மேலுள்ள ஆலயத்திலும் ரிஷ்யசிருங்கர் உபாஸித்து ஒன்ருகக் கலந்த லிங்கம் சிருங்கேரியிலிருந்து சுமார் ஆறு மைல் தூரத்திலுள்ள கிக்கா என்ற ஸ்தலத்திலும் இருந்துவருகின்றன. ரிஷ்ய சிருங்கர் மான் கர்ப்பத்திலிருந்து பிறந்ததற்கு அடையாளமாக அவர் சிரஸ்ஸில் ஒரு கொம்பு இருந்ததால் "ரிஷ்ய சிருங்கர்" (மான் கொம்புடையவர்) என்றும், தமிழில் "கலைக் கோட்டுமாமுனிவர்" என்றும் பெயர் பெற்றதற்கு இணங்க கிக்காவிலுள்ள மஹாலிங்கத்தில் சிரஸ்ஸில் கொம்பு தெரிகிறது.

இவ்விதம் புராண பிரஸித்தமாயும் அதிநிர்மலமான ஸ்வபாவத்துடன் கூடிய மஹர்ஷியால் பரிசுத்தம் பண்ணப்பட்டதாயுமுள்ள ஸ்தலமே இப்பாரத பூமியின் தக்ஷிணப் பிரதேசங்களுக்காக ஏற்படுத்தும் வியாக்யான ஸிம்ஹாஸன பீடம் அமைக்கத் தகுந்த இடமென்று ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யார் தீர்மானித்ததில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. தவிரவும் அனுபவபர்யந்தம் நிலைக்கும்படியான அத்வைத

நிஷ்டையை அனுஷ்டித்துக் காட்டி சிஷ்யர்களை போதித்து உத்தாரணம் செய்யத் தகுந்த ஆசார்ய பீடம் ஸ்தாபிக்க ஸ்தலம் பார்த்து வரும் ஸமயம் இவ்விடம் துங்கா நதிக்கரையில் ஒரு தவளை பிரஸவ வேதனையால் சிரமப்படுவதுடன் வெய்யிலில் தவிப்பதைப் பார்த்து ஒரு ஸர்ப்பம் தன் படத்தைக் குடையாகப் பிடித்து நிழல் கொடுத்து உதவும் அற்புத காக்ஷியைக் கண்டு, இதல்லவோ காமக்ரோதாதிகள் அற்று மிகவும் சாந்தியை அளிக்கக் கூடிய ஸ்தலம் என்று தீர்மானித்தார். இவ்விடத்திலேயே மிகக் குறைவான தன்னுடைய முப்பத்திரண்டு வருஷ ஆயுஸ்ஸில் பன்னிரண்டு வருஷங்கள் தங்கியிருந்ததாக சொல்கிறார்கள். இதிலிருந்தே அவர்களுக்கு இவ்விடத்தில் எவ்வளவு ப்ரியம் இருந்ததென்பது வெளியாகிறது.

சிருங்கேரிக்கு தர்சனார்த்தம் சென்ற ஒரு பக்தர் ஸித்திம்கதர்களால் முன் ஆசார்யாரிடம் பேசிக் கொண்டிருக்கையில் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதர் ஈசுவரரின் அவதாரமென்பதை மறந்து மனுஷ்ய புத்தியுடன் "இக்காலத்தில் ரயில், மோட்டார் முதலான ஸௌகர்யங்கள் இருக்கும்போதே இங்கே வருவது சிரமமாயிருக்கிறதே. ஆதி ஆசார்யார் பாதசாரியாக ஸஞ்சாரம்செய்த ஸமயம் இவ்விதம் மலைகளுக்கு மத்தியில் நடுக்காட்டில இப்படி ரமணீயமான ஸ்தலமிருப்பதை எப்படித்தேடிக் கண்டு பிடித்தாரென்று நினைத்தால் மிகவும் ஆச்சர்யமாயிருக்கிறது" என்றார்.

அதற்கு ஆசார்யார் "ஜகத்தை ஸ்ருஷ்டி செய்த பகவானுக்கு எது எது எங்கே எங்கே இருக்கிற தென்று தேடிப்பார்க்க வேண்டுமோ?" என்று கேட்டார்கள். அவ்வித அதிரமணீயமான பிரதேசம். விபண்டகர் மலையைச் சுற்றி சிறு கிராமமும், ஸ்ரீ சாரதா கோவில், ஸ்ரீமடம் கட்டிடங்கள், கடைகள் முதலானவைகள் ஏற்பட்டதுடன் போக்கு வரத்து ஸௌகர்யமும் இக்காலத்தில் ஜாஸ்தியாக ஏற்பட்டும் கூட இன்னமும் ஏகாந்த வாஸத்திற்கும் மனச் சாந்திக்கும் இன்றியமையாத ஸ்தலம் சிருங்கேரி. தவிரவும் ஆதிசங்கரர் முதல் நாளதுவரை அப் பீடத்தையலங்கரித்து வந்திருக்கும் மஹான்களுடைய தபோ பலமும் சேர்ந்திருப்பதினுல் சிருங்கேரி மிகவும் உத்கிருஷ்டமான புண்ய ஸ்தலமாகவே விளங்கிவருகிறதென்பதில் ஸந்தேகமில்லை.

---

## அத்யாயம் 2

### ஸ்ரீ சங்கர பகவத்பாதர்

ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதாசார்யார் எப்பொழுது பிறந்தார், எங்கே பிறந்தார், எங்கேயெல்லாம் ஸஞ்சரித்தார் என்பது முதலான விஷயங்களைப் பற்றி விசாரம் செய்வதில் நமக்கு வாஸ்தவத்தில் எவ்வித பிரயோஜனமுமில்லை. உபநிஷத்துக்களில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கும் பிரஹ்மாத்மைக்யரூப

மான அத்வைத தத்வத்தை வெகு தெளிவாக நிர்வச னம் பண்ணிக்கொடுத்து இப்பாரத பூமிக்கும் பொது வாக ஜகத்திற்குமே அனுக்ரஹம் செய்து கொடுத்த பெருமை அவரையே சேர்ந்தது. அந்த தத்வம் எப்படி தேசத்திலுலோ காலத்திலுலோ வரையறுக் கப்படாததோ, அதேமாதிரி அவர் செய்த அனுக்ரஹ மும் கால தேசங்களுக்கு அதீதமானவை. அப்படி யிருக்க அவர் விஷயமாக கால தேச வர்த்தமானங் களை அறிந்துகொள்ள நாம் நினைப்பது அனுவசியமே யாகும். இருந்தாலும் ஸாமான்ய மனிதர்களுக்கு ஒரு மஹான் எப்படியிருந்தார், எங்கே இருந்தார், என்ன செய்தார் என்று தெரிந்துகொள்வதிலும், அவருக்கு ஞானம் எப்படி ஏற்பட்டது; காட்டிலா, நாட்டிலா, மலையிலா, மரத்தடியிலா; அப்படியானுல் அந்த காடு எது, நாடு எது, மலை எது, மரம் எது என்றெல்லாம் தெரிந்துகொள்வதிலும் விசேஷமான ஒரு குதூஹலம் இருக்குமென்பதை மறுக்க முடி யாது. தவிரவும் யாரோ ஒரு பெரியவர் எப் பொழுதோ எங்கேயோ இருந்தார் என்று தெரிந்து கொள்வதைவிட அவர் இருந்த ஊர், அவர் வகுப்பு இதை அறிந்தால் அவருக்கு நம் மனஸினுலாவது ஓர் உருக் கொடுத்து நினைத்துப்பார்க்க முடிகிறது. அவ் விதம் உருக் கொடுத்தாலொழிய தியானத்திற்கு நன்கு விஷயமாகிறதில்லை. இந்த ரீதியாய் கவனித் தால் ஸ்ரீ சங்கர பகவத் பாதருடைய அவதார கதை களுக்கும் ஓர்வித பிரயோஜனம் இருக்கிறதென்றே

சொல்லவேண்டும். அவர்களுடைய அத்யுத்தமமான கிரந்தங்களை பரிசீலனம் செய்து அவர்களுடைய வாக்சைலியையும், பிரஸன்ன கம்பீரமான நடையையும், நிர்தாக்ஷிண்யமான தத்வ நிஷ்டையையும், பக்ஷபாதமற்ற வாதங்களையும், வேதத்திலுள்ள அசைவற்ற பிடிமானத்தையும், ஸகல லோகமும் க்ஷேமமடைய வேண்டுமென்ற தீவிரமான கருணையையும், மற்றும் உள்ள அபரிமிதமான மேன்மைகளையும் கண்டு ஆஸ்வாதனம் செய்ய வலிமையுள்ள புண்யசாலிகளுக்கு அவருடைய மஹிமை இவைகளிலிருந்து எப்படி நன்கு தெரியுமோ அவ்விதம் அவருடைய சரித்திரவரலாறுகளிலிருந்து தெரியவராது. அவ்வித கிரந்த பரிசீலனம் செய்து அனுபவிக்க பாக்கியமில்லாத ஸாமான்ய ஜனங்களுக்கு அவருடைய மஹிமையைத்தெரிந்து கொள்ள இந்தக் கதைகள் ஒருவாறு உபயோகப்படுகின்றன.

ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் சரித்திரத்தை வர்ணிப்பதாக சங்கரவிஜயம் என்று பெயருள்ள அநேகம் கிரந்தங்கள் உலகில் பிரசாரம் அடைந்து வருகின்றன. அவைகளுள் மாதவர் செய்த சங்கர திக்விஜயம் என்பதே பிரதானமாயுள்ளது. அதிலிருந்து அநேகம் சுலோகங்களை எடுத்து வேறு சில சுலோகங்களைச் சேர்த்து "பதஞ்ஜலி சரிதம்", "வ்யாஸாசலீயம்", "சங்கராப்யுதயம்" முதலிய பெயரிட்டு சில புஸ்தகங்கள் ஸமீபத்தில் வெளிவரத் தலைப்பட்டிருப்பதுடன், இவைகளிலிருந்து தான் மாதவர் திருடியிருக்கிறுர்

என்றுகூட சிலர் சொல்லத்துணிந்திருக்கிருர்கள். எது பிரமாணமாயிருந்தாலும் ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் சரித்திரத்தில் அநேக முக்யாம்சங்கள் ஒரே மாதிரி தான் காணப்படுகின்றன. இப்பரத கண்டத்தின் தென்மேற்கு மூலேயிலுள்ள கேரள தேசத்தில் பூர்ணு நதிக்கரையில் காலடி என்ற க்ஷேத்திரத்தில் ஆத்ரேய கோத்ரத்தில் ஆர்யாம்பா, சிவகுரு என்ற ஸதீபதிகளுக்கு பகவதனுக்ரஹத்தினுல் புத்திரராகப் பிறந்து, மூன்ருவது வயதில் தகப்பனே இழந்து, ஐந்தாவது வயதில் உபநயனம் செய்யப்பெற்று, அதிசீக்கிரத்திலேயே ஸகல வேதவேதாங்க சாஸ்திரங்களேக் கற்றறிந்து, தாயாரிடத்தில் சிரமப்பட்டு அனுமதிபெற்று எட்டாவது வயதில் ஸந்யாஸம் செய்து கொண்டு, குருவைத் தேடி கடைசியில் நர்மதா தீரத்தில் ஸ்ரீ கோவிந்த பகவத் பாதரை யடைந்து, அவருடன் சில நாள் தங்கிவிட்டு, பிறகு அவர் அனுமதியையும் ஆக்ஞையையும் பெற்று வாராணஸீ, பதரீ முதலான இடங்களில் ஸஞ்சரித்து, ச்ருதி ப்ரஸ்தானமென்ற உபநிஷத்துக்கள், ஸ்ம்ருதி ப்ரஸ்தானமென்கிற ஸ்ரீமத் பகவத்கீதை, ஸூத்ர ப்ரஸ்தானமென்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் ஆகிய ப்ரஸ்தானத்ரயத்திற்கும் பாஷ்யங்கள் இயற்றிக்கொண்டு உலகத்திற்கு சாசுவதமான உபகாரத்தையும் செய்து கொடுத்தார். தவிரவும் வேதாந்த ஸித்தாந்தத்தை ஸ்தாபிப்பதற்கு அங்கமாக அதிலிருந்து வேறுபட்டிருக்கும் மதங்களேக் கண்டிப்பது அவசியமென்று கருதி, பூர்வமீமாம்

ஸையை நிலைநிறுத்தி கர்மமார்க்கத்திற்கு மிகவும் பிரா தான்யமேற்படுத்திய குமாரிலபட்டரைக் காண இவர் புறப்பட்டுப்போன ஸமயம், அவர் பால்யத்தில் மாறு வேஷம் பூண்டு பௌத்த குருக்களிடம் பௌத்த மத தத்வங்களைத் தெரிந்துகொண்டு, பின்னால் அவைகளை வைதிகமத ரீதியாய் கண்டிக்கும்படி ஏற்பட்டதும் ஒருவாறு குருநிந்தையாகுமென்று நிச்சயித்து அதற்கு பிராயச்சித்தரூபமாக பிராணந்தப்பிராயச்சித்தமான துஷாக்னியில் பிரவேசித்திருப்பதைக்கண்டு, அவருடைய அந்த்யகாலத்தில் கூடவிருந்து அனுக்ரஹித்து விட்டு, அவர் சொல்லியபடி அவர் சிஷ்யரான மண்டனமிச்ரரைக் காண மாஹிஷ்மதீ பட்டணம் வந்து சேர்ந்து, அங்கு அவருடனும் அவர் பத்னீ உபய பாரதியுடனும் வாதம் செய்து, அவரைத் தன் சிஷ்யராக்கி ஸுரேசுவராசார்யார் என்ற யோகபட்டத்துடன் ஸன்யாஸியாக்கிக் கொண்டார். பத்மபாதாசார்யார், ஹஸ்தாமலகாசார்யார் தோடகாசார்யார் முதலானவர்கள் அநேகர் சிஷ்யர்களாக ஏற்பட்டார்கள். பிறகு பரதகண்டம் பூராவும் திக்விஜயம் செய்யப்புறப்பட்டு அசாஸ்திரீயமான ஆசாரங்களைக் கண்டித்தும், வைதிக அனுஷ்டானங்களை ஸ்தாபித்தும், ஜன ஸமூகத்தையே கெடுக்கக்கூடிய அநேக துராசாரங்கள் தலைப்பட்டிருப்பதை நிரஸனம் செய்தும், பிராசீன ஸம்பிரதாயப்படி பரிசுத்தமாயும் மஹிமை பொருந்தியதுமான வைதிக ஸித்தாந்தத்தையும் வைதிக தர்மத்தையும் நிலை நாட்டினார். இப்பரி

சுத்தத்தன்மையைப் பாதுகாத்து பரிபாலிப்பதற்காக தக்ஷிண திக்குக்காக சிருங்கேரியில் ஒரு மடத்தையும், மேற்கு திக்குக்காக துவாரகையில் ஒரு மடத்தையும், வடக்கு திக்குக்காக பதரியில் ஒரு மடத்தையும், கிழக்கு திக்குக்காக புரீ ஜகன்னாதத்தில் ஒரு மடத்தையும் ஆக நான்கு மடங்களை ஸ்தாபித்து மேலே குறிப்பிட்ட நான்கு சிஷ்யர்களையும் அந்தந்த பீட நிர்வாஹத்தில் நியமித்தார். இவ்வளவு அபாரமான கார்யங்கள் யாவற்றையும் தன் முப்பத்திரண்டாவது வயதிற்குள் செய்திருக்கிறார். இவ்வளவு கார்யங்களையும் செய்ததுடன், பாஷ்யங்களைத் தவிர ஸ்தோத்ரங்கள், பிரகரணங்கள், மந்த்ரசாஸ்திர கிரந்தங்கள் முதலான கணக்கில்லாத புஸ்தகங்களையும் ரசனைசெய்ய எப்படி அவகாசமும் சக்தியுமேற்பட்டதென்று மனுஷ்ய ரீதியில் ஆலோசித்தால் அசாத்தியமென்றே தோன்றும். இந்தக் காரணத்தைக் கொண்டே, இவர் ஸனகாதிகளுக்கு ஆலமரத்தடியில் உபதேசம் செய்துகொண்டிருக்கும் பரமேசுவரரின் அவதாரம் என்றே பெரியோர்கள் சொல்லிவருவது உண்மை யென்று நன்கு விளங்குகிறது.

---

# அத்யாயம் 3

## ஸ்ரீ சங்கரர் மஹிமை

ஜகத்தில் ஸத்கதியைத் தேடும் ஜனங்கள் எல்லா ரும் ஒரே விதமான அதிகார ஸம்பத்துடன் இருக்க முடியாதென்பதை நன்கு உணர்ந்து அவரவர்கள் தத்காலமிருக்கும் நிலைக்கும் அவரவர்களுடைய யோக்கியதைக்கும் தக்கபடியே சிரேயஸ் ஸாதனங்களை பலவாருக வேதத்தில் விதித்திருக்கிறதென்கிற தத்வத்தை ஸ்ரீ சங்கர பகவத்பாதர் எடுத்துக்காட்டியது போல் யாரும் காட்டியதில்லையென்று உறுதியாய் சொல்லலாம். ஒரு கல்லில் பகவான் ஆவிர்பாவமடைவார் என்ற கொள்கையிலாவது, பகவத் தத்வம் எவ்வித நாமரூபங்களுக்கும் அதீதமானதால் பகவானை ஜகந்நியந்தா என்று சொன்னுல்கூட அவர் மஹிமையைக் குறைத்ததாகுமென்ற கொள்கையிலாவது, நமது ஆசார்யாருக்கு எவ்வித ஆக்ஷேபணையும் கிடையாது. இரு கொள்கைகளையும் சரிதானென்றே சொல்வார். ஸமுத்திரத்தில் பத்து ஆழாக்கு ஜலமிருக்கிறதென்று சொன்னுல் வாஸ்தவமே; ஸமுத்திரத்தில் பத்துப் படி ஜலமிருக்கிறதென்று சொன்னுலும் வாஸ்தவமேயாகும். ஸமுத்திரத்தில் பத்து ஆழாக்கு ஜலம்தான், பத்துப் படி ஜலம்தான், என்று சொன்னுல் மாத்திரம் தவறுதலாகும். இந்த ரீதியில் நமது ஆசார்யார் மற்ற எல்லா மதங்களையும் ஒப்புக்கொண்டவரேயாவார். ஒவ்வொருவர் மனுே பாவ

ளைக்கும், சக்திக்கும், வாஸனைக்கும், அதிகார ஸம்பத்திற்கும், தக்கபடி பலவிதமான ஸாதனங்கள் வேதத்தில் விதிக்கப்பட்டிருப்பதால் யாரும் தனக்கு வேதத்தில் சிரேயஸ் ஸாதனம் சொல்லவில்லையென்று சொல்ல முடியாது. அதேமாதிரி இந்தக் காலத்திற்கு, இந்த தேசத்திற்கு, ஸாதனம் சொல்லவில்லையென்றும் சொல்ல முடியாது. அனந்தமான மாறுபாடுகளை உடைய காலம், தேசம், அதிகாரி இவர்களுக்கு தக்கபடி சொல்லியிருப்பதாலேயே வைதிக மதம் ஸநாதனமும் சாசுவதமுமாகும். இதை நன்கு உணர்ந்து நிர்வசனம் பண்ணிக்காட்டி வீணாய் மதத் துவேஷம் வேண்டாமென்று போதித்துக் கொடுத்ததினாலேயே நமது ஆசார்யார் **ஜகத்குரு** என்ற விசேஷ பிருதுக்கு உரித்தவரானார். நிர்குணமான பிரஹ்ம தத்வத்தையே முக்கியமாக அவர் எடுத்துக் காட்டினபோதிலும், ஸகுண மூர்த்தியை வைத்துக்கொண்டு தான் பகவானை ஆராதனம் செய்ய வேண்டுமென்பதை வற்புறுத்தியதினால் **ஷண்மதஸ்தாபனாசார்யார்** என்ற பெயரையும் பெற்றார்.

தத்வ விசாரம் செய்வதில் அவருக்கு நிகர் யாரும் கிடையாது. பகவத் பக்தர்களிலும் அவரையே முதலாவதாக எண்ணவேண்டும். புருஷகாரம் அதாவது நம் பிரயத்னத்தினாலேயே ஸகலவித சிரேயஸ்ஸையும் அடையலாமென்று அவர் எடுத்துக்காட்டும்போது ஈசுவரர் ஒருவர் தேவையில்லை போலவே தோன்றும். நம்முடைய பிரயத்தினங்கள், அதன்

பலன்கள் யாவும், பகவததீனமாய்த்தான் ஸித்திக்கு மென்பதையும் வற்புறுத்துவார். எவ்விதமான ஸங்கத்தையும் உதறி எரிந்துவிட்டு தூய மனதுடன் அவதூத நிலையை அடைவதே ஸந்யாஸம் என்பார்; அவ்விதப் பற்றற்ற நிலையடைந்துவிட்டால் ராஜ்ய நிர்வாஹம் செய்தாலும் பாதகமில்லை யென்பார். இதரர்களுடைய நிலைக்கு இறங்கி அவரவர்களுக்குத் தகுந்தபடி உபதேசம் செய்ய அம்மஹானால் முடிந்தது. மற்றவர்களுக்கு அவர் நிலைக்கு ஏறிப்பார்க்க முடியுமா? ஸ்ரீ சங்கர பகவத் பாதர் பக்தராவென்றே சிலர் ஸந்தேகப்படுகிறார்கள். பக்தராயிருந்தால் சிவ பக்தரா, விஷ்ணு பக்தரா, என்று நிச்சயிப்பதும் சிரமம். எல்லாவிதமான மூர்த்திகளுக்கும் அதிஷ்டானமாயுள்ள பரதத்வத்தில் அவர் ஈடுபட்டவராதலால் அவர் சைவருமாவர், வைஷ்ணவரும் ஆவர், சாக்தரும் ஆவர் எந்த தேவதைக்கும் பக்தராவர். வேதத்திற்குள்ள பிராமாண்யத்தை அவரைப்போல் வற்புறுத்தியவர் கிடையாது. யுக்தி வாதத்திலும் கொஞ்சமேனும் பின்வாங்கமாட்டார். இதெல்லாம் அவரிடத்திலுள்ள விருத்தாம்சங்கள் போலத் தோன்றும். இதினாலேயே இவரை அநேகர் சரியானபடி அர்த்தம் செய்துகொள்ள முடியாமல் திண்டாடுகிறார்கள். அவருடைய உபதேசங்களின் உண்மையை நன்கு அறிந்துகொண்டு பயன்படுத்திக்கொள்ள வேண்டிய சக்தி பகவதனுக்ரஹத்தினால் நமக்கு ஏற்பட்டுவிட்டால், நாம் அறிந்துகொள்ளக் கூடாத

தத்வமோ, அடையக் கூடாத லாபமோ, யாதொன்றும் கிடையாது. அச்சக்தியை பகவான் நமக்குக் கொடுத்து அருள் புரிவாராக!

---

## அத்யாயம் 4

### ஸ்ரீ ஸுரேசுவராசார்யார்

ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யாரை அண்டி கிருதார்த்தர்களான ஏராளமான சிஷ்யர்களில் வித்யா கௌரவத்தினுல் ஸ்ரீ ஸுரேசுவரரும், பக்தியின் பெருக்கால் ஸ்ரீ பத்மபாதரும், ஆத்மானுபவ நிஷ்டையால் ஸ்ரீ ஹஸ்தாமலகரும், ஸேவா பலத்தினுல் ஸ்ரீ தோடகரும் அதிபிரஸித்தர்களாக இருந்தார்கள். இவர்களுடைய பெருமையைப் பற்றித் தெரிந்து கொண்டாலே இவர்களின் குருநாதரின் மஹிமை நன்கு விளங்கும்.

ஸ்ரீ ஸுரேசுவரரே மாதவாசார்யருடைய ஸ்ரீ சங்கர திக்விஜய மஹா காவ்யத்திற்கு உப நாயகராவார். இவர் காஷ்மீர் ஸம்ஸ்தானம் ஆஸ்தான பண்டிதரான ஹிமமித்திரரின் அருமைப் புதல்வர். இவரை மண்டன மிச்ரர் என்றும் விசுவரூபர் என்றும் அழைப்பார்கள். இவர் வேதாத்யயனம் பூர்த்தியாக செய்து வேதாங்கங்களையும் நன்கு கற்றறிந்த பின் மிகவும் சிரத்தையுடன் கர்மானுஷ்டானம் செய்யும்

நோக்கத்துடன் விஷ்ணு மித்திரரென்ற வித்வானின் புத்திரியான உபய பாரதீ என்ற ஸரஸ வாணியை விவாஹம் செய்து கொண்டு நெறிதவராமல் இல்லற தர்மத்தை நடத்தி வந்தார். இவரை யாரும் அன்புடன் போற்றி 'உம்பக' (அய்யா) என்றும் இவர் பார்யையை 'உம்பா' (அம்மா) என்றும் அருமைப் பெயரிட்டு அழைத்தார்கள்.

நர்மதா தீரத்தில் மாஹிஷ்மதீ என்ற நகரத்தில் இவருடைய கிருஹம் இந்திரனுடைய அரண்மனை போல் சோபித்தது என்றும், கிருஹத்தின் மேல் உப்பரிகைகள் ஆகாயத்தைத் தெரியவொட்டாமல் உயர்ந்திருந்தன வென்றும், வர்ணிக்கப்பட்டிருப்பதிலிருந்து இவருடைய லௌகிகமான ஐசுவரிய ஸம்பத்தும் நன்கு வெளியாகிறது. இவருடைய கிருஹத்தைக் கண்டுபிடிக்க என்ன அடையாளமென்று ஸ்ரீ சங்கரர் விசாரித்து வரும் ஸமயம் 'எவர் வீட்டு வாசலிலுள்ள கிளிகள், வேதம் ஸ்வத: பிரமாணமா பரத: பிரமாணமா, கர்மாவே பலனைக் கொடுக்கிறதா ஈசுவரன் தான் பலதாதாவா, ஜகத்து நித்யமா, அநித்யமா, என்றெல்லாம் பேசிக்கொள்கின்றனவோ அதுவே அவர் கிருஹம்' என்று குறிப்பிடப்பட்டிருப்பதால் இவருக்கு வைதுஷ்யமும் சிஷ்ய ஸம்பத்தும் எவ்வளவு ஜாஸ்தி இருந்ததென்று விளங்குகிறது. பால்யத்திலேயே ஸகல வித்யைகளையும் கசடறக் கற்றபடியினாலேயே இவருக்கு 'விசுவரூபர்' என்ற பெயர் ஏற்பட்டது போலும்.

வேதத்தின் பிராமாண்யத்தை நன்கு ஸ்தாபித்து வேதத்தில் த்ருடமான நம்பிக்கையை உண்டாக்கி, நம் பாரத பூமியில் வைதிக மதத்தை மறுபடியும் நிலை நாட்டி, என்றும் மறக்க முடியாத பேருதவியைச் செய்த குமாரிலபட்டாசார்யாரின் உத்தம சிஷ்யராக இவர் ஏற்பட்டார். தன்னைவிட ஸகல சாஸ்திரங்களிலும் தன் சிஷ்யனே மேன்மைபெற்றவனென்று குருவே மதித்து, ஸ்ரீ சங்கரர் திக்விஜயத்திற்காகப் புறப்பட்ட ஸமயம் தான் நேரில் வாதம் செய்யக் கூடிய ஸந்தர்ப்ப மில்லாததினால் 'என் சிஷ்யனை அதிபிரஸித்த வித்வானாகிய மண்டனமிச்ரரை நீங்கள் வாதத்தில் ஜயித்து ஸ்வாதீனப்படுத்திக் கொண்டால் உலகமே ஜயிக்கப்பட்டதாக ஆகும். ஆகையால் தாமதமன்னியில் அவரிடத்திலேயே செல்லுங்கள்" என்று சொன்னபடி ஸ்ரீ சங்கரரும் சென்றார்.

அங்கே ஆகாச மார்க்கமாய் மண்டனமிச்ரருடைய கிருஹத்திற்குள் பிரவேசித்ததும், மண்டனமிச்ரர் கோபம் மேலிட்டுச் சொல்லிய உதாஸீன வார்த்தைகளுக்கு ஸ்ரீ சங்கரர் மிருதுவாய் பதில் சொல்லி மடக்கின விதமும், பின்னால் ஸரஸ்வதீதேவியின் அவதாரமான உபயபாரதியின் மத்யஸ்தத்தில் ஸ்ரீ சங்கரரும் மண்டனமிச்ரரும் சாஸ்திர விஷயமாக பலமாக வாதம் செய்ததும், மண்டனமிச்ரர் தோற்றவுடன் தன்னையும் ஜயிக்காத பக்ஷத்தில் பூர்ணமான வெற்றி ஏற்படாதென்று உபயபாரதீ சொல்லி ஸ்ரீ சங்கரருக்கு இந்த அவதாரத்தில் பரிசயமில்லாத காம

சாஸ்திரத்தில் அவள் கேள்வி கேட்கவாரம்பித்த வுடன் ஒரு மாஸம் தவணை பெற்றுக்கொண்டு காட்டு வழியாய்ப் போகையில் ஸமீபத்தில் இறந்திருந்த அமருகராஜனின் சரீரத்தில் பரகாயப்பிரவேச சக்தி யால் உள்புகுந்து அச்சரீரத்துடன் எழுந்து காமகலை களை நன்கு அப்யஸித்து திரும்ப தன் சரீரத்திற்கு வந்து உபயபாரதீ இருக்குமிடம் வரும்போதே தான் ஜயிக்கப்பட்டுவிட்டதாக அவள் ஒப்புக்கொண்டதும், உடனே அவள் தன் ஸ்வஸ்தானமான ஸத்ய லோகத் திற்குப் புறப்பட யத்தனிக்கையில், அவளை வன துர்க்கா மந்திரத்தினுல் கட்டுப்படுத்தி, இப்புவியில் ஆஸ்திகர்களுக்கு அனுக்ரஹம் செய்துகொண்டு தான் குறிப்பிடும் ஸ்தலத்தில் ஸான்னித்யம் அடைந்திருக்க வேண்டுமென்று ஸ்ரீ சங்கரர் பிரார்த்தித்ததற்கு இணங்கி அவளும் சிருங்ககிரியில் சாசுவதமாய் தங்கி விளங்கிவருவதும், அநேகமாய் யாவரும் அறிந்த விஷயமேயாகும்.

உபயபாரதீ மண்டனமிச்ரரின் பத்தினியானதால், அவர் ஸுரேசுவராசார்யாரான பிறகு தன் 'பார்யை' யை அர்ச்சிக்கவிருந்திருக்க முடியாதென்று காரணம் சொல்லி ஸுரேசுவரர் சிருங்கேரி பீடத்திலிருக்கவில்லை யென்று சிலர் யுக்திவாதம் செய்கிருர்கள். இவ் வாதத்திற்கு ஏதேனும் பலமிருக்குமாகுல் ஸ்ரீ சங்கரர் பரமேசுவரரின் அவதாரமாயிருப்பதால் அவரும் தன் 'பார்யை'யான அம்பிகையை ஸ்துதி செய்திருக்கவும் முடியாது, என்று ஏற்படுமென்பதை அவர்கள்

மறந்துவிடுகிறார்கள். ஸுரேசுவரருடைய ஸமாதி சிருங்கேரி ஸ்ரீ சாரதா கோவிலுக்குத் தென்புறத்தில் இன்னமும் இருந்து பூஜிக்கப்பட்டு வருகிறது. ஆகையால் இவ்வீண் வாதங்களெல்லாம் ஆதாரமற்றவைகளே ஆகும்.

மண்டன மிச்ரர் கர்மடராயிருந்ததுடன் கர்மானுஷ்டானத்தில் அதிகாரமில்லாத குருடு அங்கஹீனர் முதலானவர்களுக்குத்தான் ஸந்யாஸம் ஏற்பட்டதென்ற கொள்கையையுமுடையவர். பின்னால் ஸ்ரீ சங்கரரின் சிஷ்யராகி ஸன்யாஸம் பெற்ற பிறகும்கூட இவர் விஷயத்தில் மற்ற சிஷ்யர்களுக்கு நம்பிக்கையேற்படவில்லை. ஸ்ரீ சங்கரரின் ஸூத்ர பாஷ்யத்திற்கு தான் ஒரு வார்த்திகம் எழுத அனுமதிக்க வேண்டுமென்று ஸுரேசுவரர் கேட்டவுடன் மற்ற சிஷ்யர்கள் "இவருக்கு கர்மாவில்தான் நம்பிக்கை. இவரை நம்பாதீர்கள். தங்கள் பாஷ்யத்தைக் கூட கர்மபரமாகவே வியாக்யானம் செய்துவிடுவார். தங்களிடத்தில் பந்தயம் வைத்து வாதத்தில் தோல்வியடைந்ததால் ஸன்யாஸ வேஷம் பூண்டாரே தவிர அவருக்கு நம் ஸித்தாந்தத்தில் பிடிமானம் கிடையாது. அவரைக்கொண்டு யாதொரு கிரந்தமும் எழுதச் சொல்லாதீர்கள்" என்று முறையிட்டார்கள். இவர்களின் எண்ணத்தை மாற்றக் கருதி, ஸ்வதந்திரமாய் வேறு கிரந்தம் எழுதும்படி ஸ்ரீ சங்கரர் ஆக்ஞை இட்டதின்பேரில் ஆத்மா நிஷ்க்ரியன் என்பதை நன்கு விளக்கிக் காட்டி "நைஷ்கர்ம்ய ஸித்தி" என்ற கிரந்-

த்தை இயற்றினர். இக்கிரந்தமும் மற்றும் இவர் எழுதியுள்ள தைத்திரீய உபநிஷத்பாஷ்யவார்த்திகம், பிருஹதாரண்யக உபநிஷத் பாஷ்ய வார்த்திகம், ஸ்ரீ சங்கரரின் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தின் வியாக்யான ரூபமான மானஸோல்லாஸம், யாக்ஞ்யவல்க்ய ஸ்மிருதியின் வியாக்யானமான பாலக்ரீடை முதலிய கிரந்தங்கள் இவருடைய அபாரமான வைதுஷ்யத்தையும், மனோ நிச்சயத்தையும், பிரவசன சக்தியையும், தூய நிலையையும் நன்கு விளக்குகின்றன. ஸ்ரீ சங்கரருக்குப் பிறகு அத்வைத சாஸ்திரத்தில் இவரே இன்னமும் உத்கிருஷ்டமாய் விளங்குகிறார். இவர் பரம்பரையில் சிருங்கேரி பீடத்தை அலங்கரித்த வித்யாரண்யர் வேண்டுமானல் இவருக்கு ஸமானமாகலாம்.

---

## அத்யாயம் 5

### மற்ற சிஷ்யர்கள்

#### ஸ்ரீ பத்மபாதாசார்யார்

இவர் சோழ நாட்டில் காவேரீ தீரத்திலுள்ள விமல பண்டிதர் என்ற பிராஹ்மண பக்த சிகாமணிக்கு புத்திரராக ஜனித்து அதி பால்யத்திலேயே ஸகல சாஸ்திரங்களையும் கற்றறிந்து உலக வாழ்க்கையில் பற்றற்று விவாஹம் செய்துகொள்ள மறுத்து ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கரையேற்றிவிடத் தக்க குருநாதரை யடையவேண்டுமென்ற தீவிர நோக்கத்துடன் தேச ஸஞ்சாரம் செய்துவந்த ஸமயம் வாரா

ணஸியில் ஸ்ரீமத்சங்கரபகவத்பாதாசார்யார் பாஷ்ய ப்ரவசனம் செய்துவருவதாகக் கேள்வியுற்று அங்கு வந்து ஆசார்யாரின் பாதகமலங்களில் தண்டனிட்டு சரண்புகுந்தார். இவருடைய பிரஹ்ம தேஜஸ்ஸையும், வித்யையையும், காம்பீர்யத்தையும், ஊக்கத்தையும் கண்டு மகிழ்ந்து ஆசார்யார் இவரை உடனே தன் சிஷ்யராக ஏற்றுக்கொண்டு ஸந்யாஸம் கொடுத்து ஸநந்தநாசார்யார் என்ற யோக பட்டமும் அளித்தார்கள். இவரே ஆசார்யாரின் முதல் சிஷ்யர். பல விதத்திலும் முதலாகவே இருந்துவந்தார். குருநாதரிடம் விசேஷமான பக்தி வைத்திருந்ததால் இவரிடம் ஆசார்யாருக்கு விசேஷமான அன்பு ஏற்பட்டு தன் கிரந்தங்களை இவருக்கு மூன்று தடவை பாடம் சொல்லியிருப்பதாகச் சொல்கிறார்கள்.

இவ்விதம் ஆசார்யாருக்கு இவரிடம் விசேஷ அன்பு ஏற்பட்ட நிமித்தம் இதர சிஷ்யர்களுக்கு இவரிடம் பொறுமை ஏற்பட்டதென்று தெரிந்துகொண்ட ஆசார்யார் அதை எப்படியும் விலக்கிவிடவேண்டுமென்று கருதினார். ஒரு நாள் ஸநந்தநரும் மற்ற சிஷ்யர்களும் கங்கையின் மறுகரையில் இருக்கும் தருணம் இக்கரையிலிருந்த ஆசார்யார் அவர்களை உடனே வரும்படி ஜாடை காட்டினார். நதியைக்கடக்க பரிசல் அகப்படவில்லை. அந்த ஸமயம் ஸநந்தநர் "அகாதமான ஸம்ஸாரக் கடலைத் தாண்டிவைக்கக்கூடிய ஆசார்ய கருணாகடாக்ஷமிருக்கையில் இந்த நதியைத் தாண்டுவது ஒரு பெரிய கார்யமா?" என்ற மன

உறுதியுடன் பிரவாஹத்தின் மேலேயே கால்வைத்து நடக்க வாரம்பித்தார். கங்கா தேவியும் இவருடைய பக்தியைக் கண்டு ஆச்சர்யப்பட்டு இவர் காலடி வைக்குமிடமெல்லாம் அதைத் தாங்க தாமரை களை தோற்றுவித்தாள். இவர் எவ்வித கவலையுமன்னி யில் நதியைத் தாண்டின விந்தையைக் கண்டு மற்ற சிஷ்யர்கள் பிரமித்து நின்றார்கள். அக்கரை போய்ச் சேர்ந்ததும் இவருடைய உறுதியான பக்தி கௌரவத் தைக்கண்டு ஸந்தோஷித்த ஆசார்யார், ஸீதா விருத் தாந்தமறிந்து வந்து சொன்ன ஆஞ்ஜனேயருக்கு ஸ்ரீ ராமபிரான் ஸம்மானம் செய்தது போலவே, இதரர் களுக்குக் கிடைக்கக்கூடாததான ஆலிங்கனத்தைக் கொடுத்தருளினார்கள். இந்த ஸம்பவத்தின் அறிகுறி யாக அதுமுதல் ஸநந்தநருக்கு 'பத்மபாதர்' என்ற பெயரை ஆசார்யாரே வழங்கினார்கள்.

இவ்விதம் பத்மபாதரிடம் விசேஷ அன்பு இருந் தும் வித்யா விஷயத்தில் ஸுரேச்வரரே மேல்பட்டவ ரென்பதை நன்கு உணர்ந்த ஆசார்யார் தன் ஸூத்ர பாஷ்யத்திற்கு வார்த்திகம் எழுதுவதற்கு ஸுரேசு வரரை நிச்சயித்தார். ஆனால் அவர் பூர்வாசிரமத்தில் கர்மடராயிருந்தபடியால் ஆசார்யாரின் உபதேசங் களையே துரர்த்தம் செய்து மாற்றிவிடுவார் என்ற பயம் மற்ற சிஷ்யர்களுக்கு ஏற்பட்டது. அவ்வித ஸந்தேஹம் தனக்கு இல்லாமலிருந்தும், சிஷ்யர்களின் அபிப்பிராயத்திற்கு இணங்கி, ஸுரேசுவரரை ஸூத்ர பாஷ்யத்திற்கு வார்த்திகம் எழுதவேண்டாமென்

றும், தனித்து ஸ்வதந்திரமாக அத்வைத ஸித்தாந்தத்தில் ஒரு கிரந்தம் எழுதும்படிக்கும், தன்வேதமான கிருஷ்ண யஜுஸ், ஸுரேசுவரர் வேதமான சுக்ல யஜுஸ், இவ்விரண்டு ஸம்பந்தமான தைத்திரீய உபநிஷத், பிருஹதாரண்யக உபநிஷத் இவைகளுக்குத் தான் இயற்றியிருக்கும் பாஷ்யங்களுக்கு வார்த்திகம் எழுதும்படிக்கும் ஆக்ஞை செய்துவிட்டு, ஸூத்ர பாஷ்யத்திற்கு ஒரு வியாக்யானம் எழுத பத்மபாதருக்கு அனுமதி அளித்தார்கள்.

அவ்விதம் ஸூத்ர பாஷ்யத்திற்கு டீகை எழுதி முடித்ததும் தீர்த்த யாத்திரை புறப்படவேண்டுமென்று அவருக்குத் தோன்றிப் புறப்பட்டுப் போகும் வழியில் அவர் தாய்மாமனிருந்துவந்த ஸ்ரீரங்கத்தில் ஒருநாள் தங்கும்படி ஏற்பட்டது. இவர் துறவறம் பூண்டதில் வருத்தம் இருந்தபோதிலும் மறுபடியும் பார்க்கக் கிடைத்ததேயென்று இவர் பந்துக்கள் ஸந்தோஷித்தார்கள். இவர் மாமன் தீவிரமான மீமாம்ஸகர். மீமாம்ஸக மதத்தைக் கண்டித்து பத்மபாதர் தன் வியாக்யானத்தில் எழுதியிருக்கும் அம்சங்களைக்கண்டு துக்கம் ஏற்பட்டாலும் தன் மறுமகனுடைய வைதுஷ்யத்தைக்கண்டு மெச்சினர். பத்மபாதரும் ராமேசுவரம் போய் வரும்வரை இக்கிரந்தம் இங்கேயே இருக்கட்டுமென்று கூறி மாமனிடம் கொடுத்து விட்டுச்சென்றுர். திரும்பிவந்து பார்க்கையில் தன் மாமன்வீடும் அதிலுள்ள தன் கிரந்தமும் தீக்கு இரையாய் விட்டதை அறிந்து மிகவும் துக்கித்

தார். மறுபடியும் வியாக்யானத்தை எழுதிவிடலாம் என்று யத்தனித்ததில் தனக்கே புத்தி சக்தி குறைந்திருப்பதாக உணர்ந்து மாமனே மருந்திட்டிருப்பரோ என்றுகூட ஸந்தேஹித்தார். உத்ஸாஹமன்னியில் தன் ஆசார்யாரின் ஸமீபம் வந்து வணங்கி நடந்த ஸம்பவங்களைச் சொல்லி மிகவும் வியஸனப்பட்டார். இதைக்கண்ட ஆசார்யார், சிருங்கேரியிலிருந்து யாத்திரையாக பத்மபாதர் புறப்படுமுன் தன்னிடம் வாசித்துக் காட்டிய பாகங்களைத் தான் திருப்பிச் சொல்வதாகச்சொல்லி, ஆறுதல் செய்தவுடன் பத்மபாதர் மிகவும் ஸந்தோஷத்துடன் ஆசார்யார் வாக்கு மூலமாகவே அப்பாகங்களை திரும்பக்கேட்டு எழுதிக் கொண்டார். இப்படிக் கிடைத்த கிரந்தத்திலும் ஐந்து பாதங்களுக்குள்ள வியாக்யானம் பூராவும் பிரஸித்திக்கு வராமல் நான்கு ஸூத்ரங்களுக்குள்ள வியாக்யானமே "பஞ்சபாதிகா" என்ற பெயருடன் விளங்கிவருகிறது.

பத்மபாதரைப் பற்றி சொல்லுங்கால், அவர் தன் ஆசார்யருடைய உயிரைக்காப்பாற்றிக்கொடுத்த ஸம்பவத்தைச் சொல்லாமலிருக்க முடியாது. ஒரு பைரவ உபாஸகன் தன் உபாஸ்ய தேவதையான கால பைரவருக்கு ஒரு ஸார்வபௌமனான அரசன் அல்லது ஆத்ம நிஷ்டரான ஸன்யாஸி இவர்களுடைய சிரஸ்ஸை பலிகொடுக்க வேண்டியிருக்கிறதென்றும், ஸார்வபௌமனான அரசன் இக்கலியில் இல்லாததினால் ஸன்யாஸியின் சிரஸ்ஸைத்தான் கொடுக்க

வேண்டியிருக்கிறது என்றும், ஆகையால் ஆசார்யார் தன் சிரஸ்ஸைக் கொடுத்து இக்கர்மாவை பூர்த்தி செய்து கொடுக்கவேண்டுமென்றும் பிரார்த்தித்தான். அப்படியே எடுத்துக் கொள்ளலாமென்று ஆசார்யார் அனுமதி கொடுக்கையில் "ஆனால் இந்த கார்யம் என் சிஷ்யர்களுக்கு, அதிலும் முக்யமாய் பத்மபாதருக்கு, தெரியாமல் நடக்கவேண்டும்" என்று சொன்னார்கள். அப்படியே ஒருநாள் சிஷ்யர்கள் எல்லாரும் ஸ்நானத்திற்காக நதிக்குப் போயிருந்த தருணத்தில் இக் காபாலிகன் வந்து ஆசார்யார் ஸமாதி நிஷ்டையில் இருக்கக்கண்டான். சிரஸ்ஸை சேதிக்க கத்தியை ஓங்கினான். அதேஸமயம், தூர நதிக்கரையிலிருந்த பத்மபாதர் உள்ளத்தில் ஆசார்யாருக்கு ஏதோ ஆபத்து என்ற எண்ணம் உதயமானவுடன், நரஸிம்ஹ மூர்த்தியை தியானித்து, அவருடைய தாதாத்மியத்தை அடைந்து, நரஸிம்ஹரூபத்துடன் அங்கு வந்து குதித்து, அந்த காபாலிகன் பேரில் பாய்ந்து, அவனது உடலைக் கிழித்தெறிந்து விட்டு அட்டஹாஸத்துடன் ஸிம்ஹநாதம் செய்ததைக் கேட்டு திடுக்கிட்டு மற்ற சிஷ்யர்கள் ஓடி வந்தார்கள். ஆசார்யாரும் நிஷ்டை கலைந்து பார்த்து ஆச்சர்யப் பட்டு மறுபடியும் தன் ஸ்வய ரூபத்தை தரிக்கும்படி பத்மபாதரைக் கேட்டுக்கொண்டார்.

பத்மபாதர் பூர்வாசிரமத்தில் அஹோபல பர்வதத்தில் ஸ்ரீநரஸிம்ஹ மூர்த்தியை உபாஸித்ததாகவும், அச்சமயம் ஒரு வேடன் வந்து என்ன செய்கிறீர்

களென்று கேட்டதற்கு தான் நரஸிம்ஹத்தைத் தேடு வதாக பதிலளித்தவுடன் அதைத் தானே தேடி அழைத்து வருவதாக சொல்லி அவ்வேடன் புறப் பட்டுப்போய் அதி சீக்கிரத்தில் ஒரு நரஸிம்ஹ மூர்த்தியைக் கழுத்தில் காட்டுக்கொடியைக் கட்டி இழுத்து வருவதைக்கண்டு தான் பிரமித்துப்போய் இவ்விதம் கட்டுப்பட என்ன காரணமென்று தான் பகவானை வினவ இந்த வேடனைப்போல் தீவிரமான தியானவலிமை பிரஹ்மாவுக்குக்கூட கிடையாதென்று பகவான் சொன்னதாகவும் உள்ள சரித்திரத்தைக் கேட்டு யாவரும் வியந்தார்கள்.

---

### தோடகாசார்யார்

ஸுரேசுவரர், பத்மபாதர், இவர்களுடைய வைதுஷ்யமாவது ஹஸ்தாமலகருடைய ஆத்மநிஷ்டை யாவது தோடகாசார்யாருக்கு இல்லாதபோனுலும் குருசுச்ருஷையில் இவரே மேலாக விளங்கினுர். ஆசார் யாரின் ஸெளகர்யங்களை கவனித்து ஸேவைசெய்வ தில் விசேஷ ஸந்தோஷத்தை அடைவார். இந்தக் காரணத்தினுல் இவருக்கு புத்தி கூர்மை போதாது என்று பத்மபாதருள்பட இதர சிஷ்யர்கள் நினைக்க இடம் கொடுத்தது.

ஒரு ஸமயம் இவர் ஆசார்யாரின் வஸ்திரங்களை சோதனம் செய்வதற்கு நதிக்குப் போயிருக்கையில் இவர் வருவதற்காக ஆசார்யார் தன் பிரவசனத்தை

ஆரம்பிக்காமலிருந்தார். பிரவசனத்தினுல் பிரயோஜனமடையக்கூடிய யோக்யதையில்லாத இவருக்காக ஏன் காத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று இதர சிஷ்யர்கள் நினைத்தார்கள். இந்த தாமஸத்தை ஸஹிக்காமல் பத்மபாதர் "சுவர் மாதிரியுள்ள ஒருவருக்காகக் காத்துக்கொண்டிருப்பானேன்?" என்று சொல்லிவிட்டார். இதைக்கேட்டு அதிருப்தியடைந்த ஆசார்யார் பத்மபாதருக்கு ஏற்பட்டிருக்கும் வித்யா கர்வத்தைத் தணிக்க எண்ணி, மானஸிகமாக தோடகாசார்யாருக்கு ஸகல சாஸ்திர பாரங்கதத்வமும் ஏற்படவேண்டுமென்று அனுக்ரஹம் செய்தார். நதிக்கரையிலிருந்து திரும்பி வந்த தோடகாசார்யார் யாரும் எதிர்பார்க்காத ரீதியில் உபநிஷத் தத்வங்களை ஸங்கிரஹித்து தோடக விருத்தத்தில் அமைந்த சில சுலோகங்களால் நிரூபிக்க, மற்றவர்கள் அவருடைய ஞானப் பெருக்கைக் கண்டு ஆச்சர்யப்பட்டார்கள். அந்த சுலோகங்களுக்கு [1] "சுருதிஸாரஸமுத்தரணம்" என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அச்சுலோகங்கள் தோடக விருத்தத்தில் வெளிவந்ததால் தான், கிரி என்று சொல்லப்பட்டு வந்த இவருக்கு தோடகாசார்யார் என்ற பிரஸித்தி ஏற்பட்டது. அது முதல் இவரும் ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் முக்கிய சிஷ்யர்களில் ஒருவராக எண்ணப்பட்டார்.

---

1. இந்நூல் வியாக்யானத்துடன் ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணி விலாஸ் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டிருக்கிறது. விலை 1—0—0

## ஹஸ்தாமலகாசார்யார்

ஸ்ரீபலி என்ற கிராமத்தில் பிரபாகரர் என்ற ஓர் வித்வான் இருந்துவந்தார். அவருக்கு வித்யா ஸம்பத்துடன் லௌகிக ஐசுவரியமும் ஏராளமாயிருந்தது. ஆனாலும் அவருக்கு ஏற்பட்ட ஒரே புத்திரன் வெறும் ஜடமாகக் காணப்பட்டான். மன்மதன் மாதிரி அழகும், ஸூர்யன் மாதிரி தேஜஸும், சந்திரன் மாதிரி ஆஹ்லாதகத்தன்மையும், பூமி மாதிரி க்ஷமையும், அப்பையனிடம் இருந்தும் ஜடன் மாதிரியே நடத்தையுள்ளவனாயிருந்தான். உபநயன வயது வந்ததும் ஊமைகளுக்கு செய்துவைக்கிற மாதிரியே உபநயனம் செய்து வைக்கப்பட்டது. விளையாட்டும் கிடையாது, பேசுவதும் கிடையாது.

இப்படியிருக்க, அந்த கிராமத்திற்கு யாத்திரைக் கிரமத்தில் ஸ்ரீசங்கரர் விஜயம்செய்த ஸமயம், அப்பொழுது சுமார் பதிமூன்று வயதுள்ள அச்சிறுவனை அவன் தகப்பனார் ஆசார்யாரிடம் காண்பித்து ஏதேனும் பரிகாரமுண்டாவென்று தெரிந்துகொள்ளக் கருதி அழைத்துச் சென்றார். பையனைப் பார்த்தவுடனேயே அவனுடைய உன்னதமான நிலையை நன்கு உணர்ந்துகொண்ட ஆசார்யார் "நீ யார்?" என்று வினவினார். உடனே அதிலலிதமான நடையில் [1] சுலோகரூபமாக ஆத்மஸ்வரூபம் யாதென்று தெளிவாய் அப்பையன் எடுத்துச் சொன்னான். இப்

1. இதற்கு "ஹஸ்தாமலகீயம்" என்று பெயர்.

பையன் அவன் குடும்பத்திற்கு பிரயோஜனப்பட மாட்டானென்று தீர்மானித்து, ஆசார்யார் இவனை தனக்கு சிஷ்யராக அங்கீகரித்து ஸன்யாஸம் கொடுத்தார். இவர் இச்சுலோகங்களால் ஆத்ம தத்வத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் வெகு தெளிவாக எடுத்துக்காட்டியதால் இவருக்கு "ஹஸ்தாமலகர்" என்றே பெயர் ஏற்பட்டது. இச்சுலோகங்களின் அழகையும் அர்த்த காம்பீர்யத்தையும் கண்டு இவைகளுக்கு தானே வியாக்யானம்செய்ய வேண்டுமென்று மிகவும் கருணையுடன் ஆசார்யாரே பாஷ்யமெழுதி அபூர்வமான அனுக்ரஹத்தை செய்திருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆசார்யார் பாடப்பிரவசனம் செய்யும்போதெல்லாம் இவரும் கூடவே யிருந்தபோதிலும் வாக்யார்த்தம் சொல்லுவதற்குவேண்டிய பாண்டித்யம் வேண்டுமென்ற நோக்கம் கொஞ்சமேனுமில்லாமல் தனக்கு ஏற்படும் ஸ்வானுபவங்கள் சாஸ்திரத்தை அனுஸரித்திருக்கிறதா வென்பதையே கவனித்து வருவார். ஒரு ஸமயம் ஸ்ரீமத் ஆசார்யாரின் பிரஹ்மஸூத்ர பாஷ்யத்திற்கு வார்த்திகம் எழுதுவதென்ற ஆலோசனை வந்த ஸமயம், ஸ்வானுபூதியில் சிறந்த ஹஸ்தாமலகரே எழுதட்டுமே என்று சிலர் சொன்னதற்கு ஆசார்யார் "அவர் எழுதினுல் நன்ருகத்தான் இருக்கும். ஆனுல் அவர் இருந்துவரும் மேலான நிலையிலிருந்து கிரந்தம் எழுதும் நிலைக்கு அவர் இறங்கிவர வேண்டுமே!" என்று சொன்னுர். அவருக்கு சாஸ்திர பரிசயம்

போதாதென்று ஆசார்யார் சொல்லியிருந்தால், மற்ற சிஷ்யர்கள் நியாயம் தான் என்று ஒப்புக்கொள்வார்கள். அப்படிக்கில்லாமல் கிரந்தம் எழுதுபவர்களைக் காட்டிலும் அவருடைய நிலை மிகவும் மேலானது என்று சொன்னவுடன் சாஸ்திராப்பியாஸமில்லாமல் இவ்வாத்ம நிஷ்டை எப்படி ஏற்பட்டதென்று அறிய வேண்டுமென்று மற்ற சிஷ்யர்களுக்கு அவா மேலிட்டு ஆசார்யாரை வினவினுர்கள். அதன் பேரில் பூர்வ சரித்திரத்தை ஆசார்யார் எடுத்துச் சொன்னுர்.

யமுனு நதிக்கரையில் ஓர் மஹான் ஸமாதி நிஷ்டையில் இருக்கும் தருணம், சில பிராஹ்மணப் பெண்கள் அங்கு ஸ்நானத்திற்கு வந்ததில், அவர்களில் ஒரு பெண் இரண்டு வயதுள்ள தன்னுடைய குழந்தையை அம்முனிவரின் ஸமீபத்தில் விட்டுவிட்டு, தான் ஸ்நாநம் செய்து வரும்வரை குழந்தையை கவனித்துக்கொள்ளச் சொல்லிவிட்டு, ஸ்நாநத்திற்கு போய்விட்டாள். குழந்தை மெள்ளமெள்ள தவிழ்ந்து பிரவாஹத்தில் விழுந்து மூழ்கி விட்டது. இதைக் கண்டு திடுக்கிட்ட தாய் அவ்வுடலை எடுத்து அம்முனிவரின் முன்னிலையில் போட்டு அலறினுள். இதுவரை நடந்தவை யாவற்றையும் தெரியாமல் உலகம் மறந்து நிஷ்டையிலிருந்த அம்மஹான் அழுகை சப்தத்திஞல் ஸமாதி கலைந்து பஹிர்முகமாகி நோக்குங்கால், நடந்த வரலாற்றை அறிந்து அத்தாயின் துக்கத்தைக்கண்டு கருணை மேலிட்டு, தன் யோகசக்தியினுல் தன் சரீரத்தை விட்டு அக்குழந்தையின் சரீரத்தில் பிரவே

சித்தார். உடனே குழந்தை உயிர் பிழைத்ததென்று தாய் எல்லேயில்லா மகிழ்ச்சியடைந்தாள். அக்குழந்தையே ஹஸ்தாமலகர். கருணைக்கு இடம் கொடுத்ததினலேயே இப்பந்தமேற்பட்டதென்று உணர்ந்ததால் இனி எவ்வித ஸங்கத்திற்கும் இடமில்லாமல் செய்யவே ஜடஞக நடித்தார். ஆகையினுல் தான் இவர் குழந்தை பர்வத்திலே வித்யாப்யாஸம் கொஞ்சமும் செய்யாத போதிலும் பரிபூர்ணமான ஞானத்துடன் விளங்கினுர்.

---

## அத்யாயம் 6

### முதல் ஆசார்யார்கள்

இவ்வுலகில் உத்பத்தியடைகின்ற எல்லாப் பதார்த்தங்களுக்கும் ஆதி காரணமாயிருக்கும் பரமாத்ம தத்வம் எப்படி ஒருக்காலும் உண்டாகாத பதார்த்தமேயாகுமோ, அப்படியே ஸகலவித அறிவுகளுக்கும் ஆதிகாரணமாயிருக்கும் தத்வமும் ஒருக்காலும் அறிந்துகொள்ள அவசியமில்லாமல் ஞான ஸ்வரூபமாகவேயிருக்கும். அத்தத்வத்திலிருந்துதான், முதலில் உண்டாகும் ஜீவன் ஞானத்தைப் பெற்று தன் பின்வருபவர்களுக்கு போதிக்கிருன். ஆகையால் வேதாந்த ஸம்பிரதாய குரு பரம்பரையில் ஆதி குருவாக ஸதாசிவர் என்ற பரதத்வத்தையே சொல்வார்கள். அவரிடமிருந்து நாராயணரும், நாராயணரிட

மிருந்து பிரஹ்மாவும் ஞானத்தையடைந்தார்கள். பிரஹ்மாவிடமிருந்து அவர் புத்திரராகிய வஸிஷ்டரும், அவரிடமிருந்து ஆரம்பித்து புத்திர பரம்பரையாகவே சக்தி, பராசரர், வியாஸர், சுகர் என்ற மகரிஷிகள் கிரமமாக ஸம்பிரதாய பிரவர்த்தகர்களாக ஏற்பட்டார்கள். சுகாசார்யார் முதல் புத்திர பரம்பரையில்லாமல் சிஷ்ய பரம்பரையே ஏற்பட்டது. அவர் சிஷ்யர் மாண்டுக்யகாரிகை எழுதிய கௌடபாதாசார்யாராவர். கௌடபாதரின் சிஷ்யர் கோவிந்த பகவத்பாதாசார்யார். இவரிடத்திலிருந்து தான் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் உபதேசம் பெற்றது.

சிருங்கேரி பீடம் ஸ்தாபித்த ஸ்ரீ சங்கர பகவத்பாதரே அப்பீட குரு பரம்பரையில் முதல் ஆசார்யாராவர். இரண்டாவதாக ஸ்ரீ ஸுரேசுவரர் பீடாதிபத்யம் வஹித்தார். இவருக்குப் பிறகு கிரமமாக நித்யபோதகனாசார்யார் (கி. பி. 773–848), ஞானகனாசார்யார் (கி. பி. 848–910), ஞானோத்தம சிவாசார்யார் (கி. பி. 910–953), ஞானகிரியாசார்யார் (கி. பி. 953–1038), ஸிம்ஹகிரியாசார்யார் (கி. பி. 1038–1098), ஈசுவர தீர்த்தர் (கி. பி. 1098–1146), நரஸிம்ஹ தீர்த்தர் (கி. பி. 1146–1228), ஆசார்ய ஸ்தானம் வஹித்துவந்தார்கள்.

பத்தாவது ஆசார்யாராக வந்த வித்யா தீர்த்தரே விஜயநகரம் ராஜ்யத்தை ஏற்படுத்திய வித்யாரண்யருக்கு குரு. இவர் பூர்வ பெயர் வித்யா சங்கரானந்த தீர்த்தர் என்றிருந்த காரணத்தினால் இவரை வித்யா

சங்கரர் என்றும் வித்யா தீர்த்தர் என்றும் சங்கரா நந்தர் என்றும் பலவாறு அழைக்கப்பட்டார் என்று தோன்றுகிறது. தக்ஷிண தேசத்தில் பலவிதமாய் ராஜ்ய க்ஷோபங்கள் ஏற்பட்டு சிரமப்பட்டுக்கொண் டிருக்கும் காலத்திலேயே அதாவது கி. பி. 1228 முதல் 1333 வரை நூறு வருஷங்களுக்கு மேலாகவே இவர் பீடாதிபத்யம் வஹித்திருக்கிறார். அக்காலத்தில் தேசத்தில் ஏற்பட்டிருந்த பலவித கலகங்களினால் இம் மடமும் பாதிக்கப்பட்டிருந்திருக்குமென்பது நியாயமே. இக்காரணத்தினாலேயே இம்மஹானுடையவும் இவர் முன்னோர்களுடையவும் சரித்திர விபரங்கள் நமக்கு நன்கு தெரியவிடமில்லாமலிருக்கிறது. இவர் சிஷ்யர்களான பாரதீ கிருஷ்ண தீர்த்தர் வித்யாரண்யர், விஜயநகர ஸம்ஸ்தான அரசர்கள் முதலானவர்கள் இவரிடம் வைத்திருந்த விசேஷ கௌரவ புத்தியிலிருந்து இவருடைய பெருமை ஒருவாறு தெரிகிறது. இவர் கடைசியில் லம்பிகா யோகத்தில் நிலைத்து உள்ளடங்கிய நிலவறையின் பேரில் இச்சிஷ்யர்கள் கட்டியிருக்கும் அத்புதமான ஆலயத்தின் விசேஷத்தன்மையிலிருந்து இவருடைய மாஹாத்ம்யமும் அவர்களுடைய பக்தியும் நன்கு விளங்குகின்றன. அவ்வாலயத்தில் புராணங்கள், யோக சாஸ்திரம், ஜ்யோதிஷம் முதலிய ஸகல வித்யைகளின் ஸாரமும் கல்லிலேயே செதுக்கிக் காட்டப்பட்டிருக்கிறது மிகவும் ஆச்சர்யகரமாகும். இதை வர்ணிப்பது ஸாத்தியமில்லை. நேரில் பார்த்தே இதன் நிகரற்ற மேன்மையை உணர

வேண்டும். ஒரு அத்புதமான அம்சத்தை மாத்திரம் இங்கு குறிப்பிடலாமென்று நினைக்கிறேன்.

கர்ப்பகிருஹத்திற்கு முன்னுள்ள மண்டபத்தில் சக்ராகாரமாக பன்னிரண்டு தூண்களை நிறுத்தி அவைகளின்மேல் விமானம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தூண்களில் வரிசையாக மேஷம், விருஷபம், மிதுனம், முதலிய ராசிகள் காட்டப்பட்டிருக்கின்றன. இம்மண்டபத்திற்கு கிழக்கே, தெற்கே வடக்கே மூன்று சிறு வாசல்கள் இருக்கின்றன. ஸூர்யன் பிரதிதினம் உதயமாகும்போது அந்த மாஸம் எந்த ராசியில் இருக்கிறரோ அந்த ராசி செதுக்கப்பட்டிருக்கும் தூணிலேயே அவருடைய கிரணங்கள் விழுமே தவிர மற்ற தூண்களில் விழாது. எப்படி இவ்வளவு துல்யமாக கணக்கிட்டுக் கட்டினார்களென்று நினைத்துப் பார்க்கக்கூட நமக்கு ஸாத்தியமில்லை. இதைக் கட்டின சில்பியின் ஸாமர்த்தியத்தைக்கண்டு ஆச்சர்யப்படுவதா? இவ்விதம் கட்ட வேண்டுமென்று மனதினுல் ஸங்கல்பித்துக் கட்டி முடித்த மஹான்களாகிய பாரதீ கிருஷ்ண தீர்த்தர், வித்யாரண்யர், இவர்களுடைய அபாரமான புத்தி வல்லமையைப் புகழ்வதா? குருவம்ச காவ்யத்தில் அச்சில்பியின் பெயர் ஜக்கண்ண என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வரிய ஆலயத்தைப் பற்றியுள்ள வர்ணனையும் படங்களும் மைஸூர் ஸம்ஸ்தானத்தாரால் 1916ல் பிரசுரிக்கப்பட்டிருக்கும் ஆர்க்கிய

லாஜிகல் ரிப்போர்ட் 12 முதல் 15 வரை பக்கங்களில் காணலாம்.

இந்த ஸந்தர்ப்பத்தில் சிருங்கேரிக்கு ஸமீபத்தி லுள்ள ஹளே சிருங்கேரி என்று சொல்கிற ஸிம்ஹகிரி என்ற ஸ்தலத்திலிருக்கும் ஒரு விசேஷமான மூர்த்தி யைப்பற்றி பிரஸ்தாபிக்க வேண்டியது அவசியம். அதன் கிழக்குப் பக்கத்தில் பாரதீ கிருஷ்ண தீர்த்தர் வித்யாரண்யர் ஆகிய இரு சிஷ்யர்களுடன் ஸ்ரீ வித்யா சங்கரருடைய மூர்த்தியும், மற்ற மூன்று பக்கங்களி லும் முறையே பிரஹ்மா விஷ்ணு ஈசுவரர் இவர்களின் மூர்த்திகளும் காணப்படுகின்றன. இவைகளுக்கு மேல் லக்ஷ்மீநரஸிம்ஹ மூர்த்தியும், எல்லாவற்றிற்கும் மேலாக சிகரத்தில் நிர்குண தத்வத்தைக் குறிக்கும் லிங்கமும், இருக்கின்றன. இம்மூர்த்திக்கு சதுர் மூர்த்தி வித்யேசுவரர் என்று பெயர் வழங்கிவருகிறது. ஸ்ரீ வித்யாசங்கரர் லம்பிகா யோகத்தில் அமருவதற்கு முன்னுல் ஜனங்களிடம் "பன்னிரண்டு வருஷங்கள் சென்றுல் என் சரீரம் இந்த ரூபத்தையடையும். நான் யோகநிஷ்டையில் அமர்ந்தபிறகு இவ்வறையை நன்கு மூடிவிடுங்கள். பன்னிரண்டு வருஷங்களாகும் முன் யாரும் எந்தக் காரணத்தாலும் திறக்கக் கூடாது" என்று சொல்லியிருந்தார். ஆனுல் யாரு டைய தவறுதலினுலேயோ, மூன்று வருஷங்களான தும் திறக்கப்பட்டுவிட்டது. அவ்விடத்தில் மஹா னின் சரீரத்தைக் காணவில்லை. அதற்கு பதிலாக,

மாதிரி காட்டப்பட்ட ரூபத்திலுள்ள லிங்கம் மாத்திரம் தெரிந்தது.

பாரதீ கிருஷ்ண தீர்த்தரும் வித்யாரண்யரும் இந்த ஸம்பவத்தைக் கேட்டு மிகவும் துக்கப்பட்டார்கள். அவர்களின் ஸ்வப்நத்தில் ஸ்ரீ வித்யாசங்கரர் தோன்றி, தான் சொல்லிய நிபந்தனைகள் நிறைவேருததால் இனி பூரு மூர்த்தியும் ஆவிர்பாவமடையாதென்றும், வேறு லிங்கத்தையே பிரதிஷ்டை செய்துவிடும்படிக்கும் உத்திரவு செய்தார்கள். அப்படியே அவ்விடத்தில் வேறு லிங்கம் பிரதிஷ்டை செய்ததுடன், மாதிரி காட்டிய மூர்த்தியை ஸிம்ஹகிரியில் பிரதிஷ்டை செய்து பூஜை ஏற்படுத்தப்பட்டது. ஸ்ரீ வித்யாசங்கரர் இன்னமும் அவ்விடத்திலேயே லம்பிகா யோகத்திலிருப்பதாகவும், பிரதி தினம் இராக்காலங்களில் அவரை தேவகணங்கள் வந்து உபாஸிப்பதாகவும், சில ஸமயங்களில் அவர்கள் பூஜை செய்யும் காலங்களில் மணியடிக்கும் சப்தம் இன்னமும் அர்த்தராத்திரி ஸமயத்தில் கேட்கப்படுகிறதென்றும் சொல்கிருர்கள். இவ்விஷயத்தை பரமாசார்யாரான ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளவர்கள் தன் ஸ்தோத்திரத்தில் கண்டிருக்கிருர்கள் (பக்திஸுதா தரங்கிணீ, பக்கம் 231).

घण्टानादपुरस्सरं प्रतिदिनं रात्रौ सुराणां गणै-

र्भक्त्या पूरितमानसैः सुमवरैः कर्पूरनीराजनैः ।

धूपैर्दीपचयैर्मनोहरतरैः संपूज्यमानं मुहु-
र्विद्यातीर्थपदारविन्दयुगलं वन्दे जगत्पावनम् ॥

இக்காரணத்தினுலேயே சிருங்கேரி மடத்திலிருந்து இப்பொழுது வெளியாகும் ஸ்ரீமுகங்களில் கூட ஸ்ரீ வித்யாசங்கரருடைய முத்திரையே உபயோகப்பட்டு வருகிறது.

ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தர் வித்யாரண்யருக்குத் தம்பியாயிருந்தும் தன்னுடைய தமயனுருக்கு மூன்று வருஷங்களுக்கு முன்னமேயே அதாவது கி. பி 1327ல் ஸன்யாஸாசிரமத்தை அவலம்பித்தார். இருவரும் வாரங்கல் என்று வழங்குகிற ஏகசிலா நகரத்தைச் சேர்ந்தவர்கள். இளையவர் யாத்திரையாக புறப்பட்டு ஸஞ்சரிக்கையில் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீ வித்யாசங்கர தீர்த்தரின் பாத பத்மங்களை ஆசிரயித்து வேண்டிக் கொண்டதின்பேரில் அம்மஹானிடமே ஸன்யாஸம் பெற்றுர். புறப்பட்டுப் போன தம்பியின் யோக க்ஷேமம் யாதொன்றும் தெரியாமலிருந்து கவலைப் பட்டுக்கொண்டிருந்த தமயன் அவரை தேடிச்சென்று கடைசியில் ஸங்யாஸி வேஷத்துடன் சிருங்கேரியில் இருப்பதைக் கண்டார். வயதில் தன்னைவிட சிறு வராயிருந்தும் வைராக்கிய நிஷ்டை ஜாஸ்தியாயிருப் பதைக்கண்டு ஸந்தோஷித்தார். தானும் வித்வானு யிருப்பதால் அப்பதவி தனக்கும் கிட்டவேண்டு மென்ற அவாவுடன், பிராஹ்மணப் பிறவியை ஸபல மாக்கிக்கொள்ள நினைத்து, தனக்கும் ஸன்யாஸம்

கொடுத்து சிஷ்யராக்கிக்கொண்டு அனுக்ரஹிக்க வேண்டுமென்று ஸ்ரீ வித்யாசங்கரரைப் பிரார்த்திக்க அவரும் அப்படியே அனுக்ரஹித்தார். பிறகு இவ்விரு ஸஹோதரர்களும் சிருங்கேரியிலேயே சிலகாலம் வஸித்தார்கள்.

இவ்விருவர்களில் வயதில் சிறியவரானாலும் ஸந்யாஸக்கிரமத்தில் பாரதீ கிருஷ்ண தீர்த்தரே மூத்தவராகிவிட்டபடியால் அவரே ஸ்ரீ வித்யாதீர்த்தருக்குப் பிறகு கி. பி. 1333 முதல் ஆசார்ய பீடத்தில் அமர்ந்து நாற்பத்தேழு வருஷங்கள் பீடாதிபத்யம் வஹித்து வந்தார். இந்த காலமே நம் பரத கண்டத்தின் சரித்திரத்தில் மிகவும் முக்கியமாகும். நம் மதத்தை ஸம்ரக்ஷிக்க வேண்டுமானால் ராஜ்ய நிர்வாஹம் ஆஸ்திகர்களான நம் மதத்தினரிடமே இருக்க வேண்டுமென்று நன்கு உணர்ந்து கி. பி. 1336ல் வித்யாரண்யர் விஜயநகரம் ஸம்ஸ்தானத்தை ஸ்தாபித்தார். பெரியோர்களிடத்திலுள்ள யோக்யதாம்சத்தைப் பார்த்து ஸாமான்ய ஜனங்களுக்கு அவர்களிடம் மரியாதையும் பக்தியும் இருந்துவரும் நிலை குன்றிவருவதைக் கண்டு, ஸ்ரீ சங்கர பகவத்பாதரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இவ்வித்யாபீடத்திலுள்ள ஆசார்யார்கள் முன்போல சிஷ்யர்களுக்கு ஹிதம்செய்ய வேண்டுமானால் இவர்களுக்கும் லௌகிக அந்தஸ்து அவசியமிருக்க வேண்டுமென்றும், ஸ்ரீ மடம் நிர்வாஹம் சிஷ்யர்களின் மனதைக் கவரும்படியான ரீதியில் கொஞ்சம் ஆடம்பரமும் வேண்டுமென்றும் வித்யாரண்யர் தீர்மானித்

தார். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் காலம் முதற்கொண்டு இருந்துவந்த ஸ்ரீ சாரதாம்பாளின் சந்தன காஷ்ட பிம்பத்திற்குப் பதிலாக ஸுவர்ண விக்ரஹத்தை பிரதிஷ்டை செய்தார். ஆலயத்தையும் ஸ்ரீ மடம் கட்டிடங்களையும் புதுப்பித்தார். விஜயநகர ஸம்ஸ்தானம் ஏற்பட்ட வருஷத்திலேயே ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயமும் நிர்மாணம் செய்யப்பட்டது. கி. பி. 1346ல் ஹரிஹர மஹாராஜாவும் அவர் ஸஹோதரர்களும் சேர்ந்து "ஸ்ரீமத் ஆசார்யாரின் தபஸ் நிர்விக்னமாய் நடப்பதற்கும் அவர்களுடைய நாற்பது பிராஹ்மண சிப்பந்திகளின் போஷணத்திற்கும்" என்று ஒன்பது கிராமங்களை தானசாஸனம் செய்து கொடுத்தார்கள். அம்மஹாராஜரின் தம்பி மாரப்பாவும் மாப்பிள்ளை பல்லப்பாவும் மஹாராஜாவின் உத்திரவுப்படி நேரில் சிருங்கேரிக்கு சென்று ஸ்ரீமத் ஆசார்யரான பாரதி கிருஷ்ண தீர்த்தரிடம் இச்சாஸனத்தை ஸமர்ப்பணம் செய்தார்கள். இப்பொழுது அகப்பட்டிருப்பதற்குள் இதுவே முதல் சாஸனமாகும். தவிரவும் இச்சாஸனம் சிலையிலேயே செதுக்கப்பட்டு சிருங்கேரியில் இருந்துவருகிறது.

ஹரிஹர மஹாராஜாவின் தம்பி புக்கராயர் விஜயநகர ஸம்ஸ்தானத்தின் இரண்டாவது அரசராக பட்டத்திற்கு வந்தவுடன், சிருங்கேரிக்கு சென்று ஸ்ரீ ஜகத்குருக்களின் அனுக்ரஹம் பெற்றுக்கொண்டதுடன், மறுபடியும் சில நிலங்களை சாஸனம் செய்து கொடுத்தார். ஸ்ரீ வித்யாசங்கராலயம் கும்பாபிஷேக

ஸமயத்தில் 600 வராகன் வரும்படியுள்ள நிலங்களை ஐந்து ஐந்து வராகன் பேரீஜ் உள்ளதாக 120 விருத்திகளாக கல்பித்து 120 பிராஹ்மண சிரேஷ்டர்களுக்கு ஸ்ரீமத் ஆசார்யார் பிரித்துக் கொடுத்து, அவர்களை ஸ்ரீ மடத்தின் ஸமீபத்திலேயே வஸிக்கும்படி செய்தார்கள். இதுவே சிருங்கேரி பட்டணத்தின் ஆரம்பமாகும்.



மஹாராஜாவின் வேண்டுகோளை யனுஸரித்து வித்யாரண்யர் அநேகமாய் விஜயநகரத்திலேயே இருந்துவந்தார். ஒரு ஸமயம் வாராணஸிக்கு யாத்திரை போனஸமயம் அங்கே கொஞ்சம் தாமஸித்து விட்டார். அந்த ஸமயம் மஹாராஜா ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தரிடமிருந்து ஸ்ரீமுகம் வாங்கி அதையும், சீக்கிரமாக திரும்பி வரவேண்டுமென்ற தன்னுடைய பிரார்த்தனையையும், அவர்களிடம் தெரிவிக்க தக்க மனுஷியர்களை காசிக்கு அனுப்பினர். அதன்படி வித்யாரண்யர் விஜயநகரம் வந்துவிட்டு சிருங்கேரிக்கு வந்தார். இதன் ஞாபகார்த்தமாக 200 வராகனுக்குமேல் பேரீஜ் உள்ள நிலங்களை மஹாராஜா அர்ப்பணம் செய்தார்.

ஸ்ரீ வித்யாரண்யர் கி. பி. 1380ல் 12வது ஆசார்யாராக பீடத்திலமர்ந்தார். இவர் ஓர் அஸாதாரணமான மஹான் என்பது மிகையாகாது. இவருடைய புத்திக் கூர்மையும், எல்லையில்லாத வைதுஷ்யமும், அஸாதாரணமான பாண்டித்யமும், ஏராளமாகச் செய்தி

ருக்கும் கிரந்த ரத்னங்களும், யோகசக்தியும், பலவித ஸ்வபாவத்தோடு கூடிய ஜனங்களை ஒன்று சேர்த்துத் திரட்டும் ஸாமர்த்தியமும், நம் ஜனஸமூகம் சீர்குலைந் திருக்கும் ஸமயத்தில் அதை ஒழுங்குபடுத்தி ஸ்திர மாக்கின பெருமையும், மற்றும் எண்ணிக்கையிலடங் காத அவருடைய அபாரசக்திகளும், யாவரையும் பிரமிக்கச்செய்யும். தேசக்ஷேமத்தைக் கருதி, தான் ஒதுங்கியிருப்பது உசிதமில்லை யென்று நினைத்து, உலக வியவஹாரங்களில் தலையிட்டு விஜய நகர ராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொடுத்தார். அதன் முன்னேற்றமும் பெருமையும் இவருடைய செல்வாக்கினுலும் நிர்வாஹ சக்தியினுலுமே ஏற்பட்டவை. அந்த ராஜ்ய நிர்வா ஹத்தில், தானே பின்னிருந்துகொண்டு ஸகல கார்யங் களையும் நடத்திவந்தார்.

இவ்விதம் இம்மஹான் நம்தேசத்திற்கும் மதத் திற்கும் இன்றியமையாத உதவி புரிந்திருந்த போதிலும் இவருடைய ஜீவ்ய சரித்திரம் நமக்கு சரிவரக் கிடைக்கவில்லை. இவர் வடதேசத்தில் யாத்திரை செய்து திரும்பின பிறகு விருபாக்ஷமலைச் சாரலில் தபஸ் செய்து கொண்டிருந்ததாகவும் அந்த ஸமயம் மாதங்க பர்வதத்தின் பக்கத்திலிருந்து எடு பட்டுப்போன விஜயநகரமென்ற ஊரை புதுப்பிக்கும் படி சிருங்கி என்றதோர் பிரஹ்ம ரக்ஷஸ் கேட்டுக் கொண்டதாயும், அதன்பேரில் அவர் அங்கே போயிருந்த ஸமயம் பிரதாபருத்ரதேவ மஹாராஜா வின் இரண்டு மந்திரிகளாகிய மாதவர் ஸாயணர்

என்பவர்கள் இவரிடம் வந்து தங்களுக்கு ஸந்ததி ஏற்படும்படி அனுக்ரஹம் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்ததாகவும், அதற்கு அவர்களுக்கு இந்த ஜன்மத்தில் ஸந்ததி ஏற்பட இடமில்லையென்றும், ஆனாலவர்களின் பெயர்கள் சாசுவதமாக உலகத்தில் இருந்துவர, தான் எழுதிவைத்திருக்கும் மஹத்தான வேதபாஷ்யங்களையும் மற்றுமுள்ள கிரந்தங்களையும் அவர்களின் பெயராலேயே பிரசுரம்செய்து விட்டால், அக்கிரந்தங்கள் ஸாயணருடையது, மாதவருடையது என்று பிரஸித்திக்கு வந்துவிடுமென்றும், வித்யாரண்யர் சொல்லி அக்கிரந்தங்களை எடுத்துக் கொடுத்ததாகவும், குருவம்சகாவ்யம் என்ற கிரந்தத்தில் காணப்படுகிறது. டில்லி சுல்தான் படைபெடுத்து பிரதாபருத்ர தேவனை ஜயித்ததும், ஹரிஹரர் முதலிய ராஜகுமாரர்கள் அங்கிருந்து ஓடியொளிந்து கடைசியில் வித்யாரண்யரை சரணம் அடைந்ததும், பிறகு அவர்களே விஜய நகர ஸம்ஸ்தானம் ஏற்பட்டவுடன் அங்கே அரசர்களாக நியமிக்கப்பட்டதும், அக்காவ்யத்தில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இது உண்மையானல், மாதவர் வேறு வித்யாரண்யர் வேறு என்று தெரிகிறது.

விஜயநகரத்தில் மூன்றுவது அரசராக வந்த (இரண்டாவது) ஹரிஹர மஹாராஜாவும், தன்னுடைய பிதாவும் பெரிய தகப்பனும் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குருவிடம் காட்டிவந்த பக்திக்கும் மரியாதைக்கும் எவ்வித குறைவுமன்னியிலேயே இருந்துவந்தார்.

வித்யாரண்யர் பீடத்திற்கு வந்தவுடன் அதாவது கி. பி. 1381ல் இவ்வரசர், முன் தானம் செய்யப்பட்டுள்ளவைகளுடன் வேறு நிலங்களையும் சேர்த்து மொத்தமாக ஒரு சாஸனம் செய்து கொடுத்தார். வித்யாரண்யர் பீடத்திற்கு வரும்போது மிகவும் வயது முதிர்ந்தவர். பிறகு ஆறு வருஷங்களே பீடாதிபத்யம் வஹித்திருக்கிறார். அவர் ஸித்தியாகும் காலத்தில் அவருக்கு வயது 119. அவர் ஸித்தியானவுடன் சிருங்கேரிக்கு ஸமீபத்திலேயே 500 வராகன் பேரீஜ் உள்ள ஏராளமான நிலங்களை இம்மஹாராஜா ஜாரி செய்து கொடுத்து, வித்யாரண்ய குருவின் ஞாபகார்த்தமாக இந்த கிராமத்திற்கு வித்யாரண்யபுரம் என்றே பெயர் ஏற்படுத்தினர்.

ஸ்ரீ வித்யாரண்யருக்குப் பிறகு சந்திரசேகர பாரதீ என்பவர் கி. பி. 1386 முதல் 1389 வரை ஆசார்ய ஸ்தானம் வஹித்தார். அதன் பிறகு நரஸிம்ஹ பாரதீ என்பவர்கள் கி. பி. 1389 முதல் 1408 வரை பீடாதிபத்யம் வஹித்து வந்தார்கள். இவர் காலத்தில் மறுபடியும் (இரண்டாவது) ஹரிஹர மஹாராஜா சிருங்கேரிக்கு வந்து ஆசார்யாரை தர்சித்து இன்னும் சில நிலங்களையும் ஜாரி செய்தார். இதையும் சேர்த்து இதற்குள் மொத்தம் 3003 வராகன் பேரீஜுள்ள நிலங்கள் ஸ்ரீ மடத்திற்கு பூஸ்திதியாக ஏற்பட்டுவிட்டன.

நரஸிம்ஹ பராதீ ஸ்வாமிகளுக்குப் பின்னல்

புருஷோத்தம பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1408 முதல் 1448 வரை நாற்பது வருஷங்கள் பீடத்தை அலங்கரித்தார்கள். அப்பொழுது விஜயநகரம் அரசராயிருந்த தேவராயருடைய வேண்டுகோளுக்கு இணங்கி, இவ்வாசார்யாரின் சிஷ்யரான சங்கர பாரதீ என்ற சங்கராநந்த பாரதீ கி. பி. 1430ல் விஜயநகர ராஜதானிக்கு விஜயம் செய்து ராஜ மரியாதையுடன் ஸத்காரம் செய்யப்பட்டார். அந்த ஸமயத்தில் அரசனும் கங்குவல்லி என்ற கிராமத்தை தானம் செய்து கொடுத்தார். மற்ற சிஷ்யர்களான புருஷோத்தமாரண்யர், மாதவ பாரதீ, விசுவேசுவர பாரதீ என்பவர்களுக்கும் தக்கபடி தானசாஸனம் செய்து கொடுத்தார். இந்த சங்கராநந்த பாரதீ ஸ்வாமிகளே பின்னுல் கி. பி. 1448 முதல் கி. பி. 1454 வரை ஆசார்யபீடத்தில் அமர்ந்திருந்தார்கள். இவருக்குப் பின் முறையே சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1454 முதல் 1464 வரை பத்து வருஷங்களும், நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1464 முதல் 1479 வரை பதினைந்து வருஷங்களும் பீடாதிபத்யம் வஹித்தார்கள்.

இவருக்குப்பின், அதாவது ஸ்ரீ சங்கர பகவத்பாதரிடமிருந்து 19வது ஆசார்யராக புருஷோத்தமபாரதீ என்பவர்கள் கி. பி. 1479ல் பீடாபிஷிக்தராகி கி. பி. 1527 வரை, அதாவது சுமார் 38 வருஷங்கள், ஆசார்யஸ்தானம் வஹித்தார்கள். இதற்கு முன்னமேயே, விஜயநகர ஸம்ஸ்தானத்தில் ஹரிஹர மஹாராஜரின் பரம்பரை சக்தி குறைந்துவந்து, கி. பி. 1490ல் அந்த

ஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த ஸேனுபதிகளில் பிரபலரா யிருந்த நரஸிம்ஹ நாயக்கரென்பவரே ராஜபதவியை ஏற்று அரசரானுர். அவருடைய இரண்டாவது குமாரரான கிருஷ்ணதேவராயர் என்பவர் கி. பி. 1509ல் அரசராகி ஸம்ஸ்தானம் சிதறிக் கிடந்ததை மறுபடி ஒன்று சேர்த்து பலப்படுத்தினதுடன், விஜய நகர ராஜ்யத்திற்கே விசேஷ சோபையை ஏற் படுத்தினுர்.

அவர் தன் விரோதியான கலிங்கதேசத்து அரச ஞகிய வீரருத்ரகஜபதிமஹாராஜனை எதிர்த்து யுத்தம் புரியப்புறப்படும் முன்னர், ஜகத்குருவான புருஷோத் தமபாரதீ ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்தைக் கோரிக் கொண்டபடியால், ஆசார்யார் தன் சிஷ்யரான வித்யாரண்யர் என்பவரை விஜய நகரத்திற்கு நேரில் அனுப்பிக்கொடுத்து ஆசீர்வதித்தார்கள். அச்சமயம் நவராத்ரி உத்ஸவ ஸமயமாகவும் இருந்ததால் மஹா ராஜர், தன் விசேஷ நன்றிக்கு அறிகுறியாக ஹுய்யாரு என்ற கிராமத்தை ஆசார்யாருக்கு அர்ப் பணம் செய்தார். அந்த தானசாஸனத்தில் தன் சத்ருக்களின் தோல்வி, தன்னைச் சேர்ந்தவர்களுடைய ஸ்திரமான அன்பும் ஸஹாயமும், தன்னுடைய ஆயுஸ் ஆரோக்யம் ஐசுவர்யம் ஆகிய மூன்றுவித பலன்களை உத்தேசித்து தானம் செய்யப்பட்டதாக கண்டிருக் கிறது. இவ்வாசீர்வாதத்தைப் பெற்று படையெடுத் துப்போனதில், மஹாராஜனுக்கு விசேஷமான வெற்றி கிடைத்து, தகர்க்க முடியாதென்று தோன்

றின பல கோட்டைகள் பிடிபட்டதுடன், கஜபதி ராஜன் மலைப்பிரதேசத்தில் ஓடி ஒளிந்து கொண்டான். அங்கே சிலகாலம் மிகவும் கஷ்டப்பட்ட பிற்பாடு கிருஷ்ணதேவராயரிடம் சரண்புகுவதே நலமென்று தீர்மானித்துக்கொண்டதை அனுஸரித்து அவ்வுதார குணமுள்ள கிருஷ்ணதேவராயரும் கஜபதிராஜனை மன்னித்து அபயம் கொடுத்ததுடன் அவர் குமாரியையும் விவாஹம் செய்துகொண்டு தன் நட்பைக் காட்டினார்.

---

## அத்யாயம் 7

### பின் வந்த ஆசார்யார்கள்

19வது ஆசார்யாரான புருஷோத்தம பாரதீ ஸ்வாமிகளுக்குப் பிறகு ராமசந்திர பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1517 முதல் 1560 வரை நாற்பத்தி மூன்று வருஷங்கள் சிருங்கேரி பீடத்திலிருந்தார்கள். இவர் காலத்தில் கிருஷ்ணதேவராயரின் மறுமகனான ஸதா சிவராயன் விஜயநகரம் ராஜ்யாதிகாரம் செய்து வந்தார். அவருடைய ஆக்ஞையின் பேரில் அவர் ஸேனாபதியான ஹொன்னப்ப நாயக்கர் என்பவர் கி பி. 1545ல் பஸ்திஹள்ளி என்ற கிராமத்தை ஆசார்யாருக்கு ஸமர்ப்பணம் செய்திருக்கிறார். ராமசந்திர பாரதீ ஸ்வாமிகளின் சிஷ்யரான நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1560 முதல் 1573 வரை பீடாதிபத்யம் வஹித்துவரும் மத்தியில்தான், தலைக்கோட்

டையில் பீஜப்பூர் சுல்தான் முதலிய மஹமதிய அரசர்களுக்கும் விஜயநகர ஸம்ஸ்தானத்திற்கும் மஹத்தான யுத்தம் நடந்து, விஜயநகரம் ராஜ்யமே சீர்குலைந்து சிதறிப்போய், சில்லரை அதிகாரிகள் சிற்றரசர்களாக தலையெடுக்க வாரம்பித்த காலம். இவ்வாசார்யாரின் பின் வந்தவரும் நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் என்றே பெயருள்ளவர். இவர் கி. பி. 1573 முதல் 1576 வரை மூன்று வருஷங்கள் பீடத்தில் இருந்தார். இவருக்குப்பின் ஆசார்யாரும் நரஸிம்ஹ பாரதியென்ற பெயரையே யுடையவர். அவர் கி. பி. 1576 முதல் 1599 வரை இருபத்திமூன்று வருஷங்கள் ஆசார்யஸ்தானம் வஹித்தார். இவ்விதம் சேர்ந்தாற் போல் மூன்று ஆசார்யார்கள் ஒரே பெயர் வகித்திருந்ததால், சிலர் தயாரித்த குரு பரம்பரையில் தவறுதலாக ஒருவரை விட்டுவிட்டு இரண்டு நரஸிம்ஹபாரதீ யென்றே கண்டிருக்கிறுர்கள்.

இவர்களுக்குப் பின் வந்த ஆசார்யாரும் நரஸிம்ஹ பாரதீயாகவே இருந்தாலும் அவருக்கு அபிநவ நரஸிம்ஹ பாரதீ யென்ற பிரஸித்தி யேற்பட்டது. இவர் கி. பி. 1599 முதல் 1622 வரை பீடத்திலிருந்தார். அவர் மந்திர சாஸ்திரத்தில் மிகவும் ப்ரவீணராக இருந்ததுடன் சிவகீதைக்கு ஓர் வியாக்யானம் எழுதியிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. அக் காலத்தில் பிடாரூர் என்ற இக்கேரியில் சிற்றரசர்களாயிருந்த கேலதி வம்சத்தவர்கள் லிங்காயத மதக்கொள்கையுள்ளவர்களாயிருந்த போதிலும் இவ்வாசார்யாரிடம்

விசேஷமான மரியாதையும் பக்தியும் உள்ளவர்கள். பலவிதத்தில் கைங்கர்யமும் உதவியும் செய்துவந்திருக்கிருர்கள். கேலதி வெங்கடப்பநாயக்கரென்பவர் ஸ்ரீவித்யாசங்கரர் ஆலயத்திற்கு தங்கத்தில் ஆறு ஸ்தூபிகள் செய்து கொடுத்திருக்கிருர். தவிரவும் தன் ராஜதானிக்கு ஜகத்குருவை வரும்படி பிரார்த்தித்து, அவர்கள் அவ்விடம் விஜயம் செய்த ஸமயம் இதன் ஞாபகார்த்தமாக கி. பி. 1601ல் 50 வராகன் பேரிஜுள்ள நிலங்களை ஜாரி செய்தார். கி. பி. 1621ல் இவ்வரசன் ஒரு சாஸனத்தில் சிருங்கேரியை மறுபடியும் நிலை நிறுத்தினதாக சொல்வதிலிருந்தும், சிருங்கேரி ஆசார்யார்களில் இரண்டு பேர்களுக்குக் குறையாமல் நாஸிக் பஞ்சவடீயிலுள்ள சிருங்கேரி மடத்தில் ஸித்தியடைந்திருப்பதிலிருந்தும், விஜயநகரம் ஸம்ஸ்தானம் எடுபட்டுப்போன தருணம் ஏற்பட்ட பலவித தொந்தரவுகளினுல் இம்மடமும் பீடிக்கப்பட்டிருந்ததென்பது தெரிகிறது. ஆனுலும் இப்பீடத்திலிருந்துவந்த ஆசார்யார்கள் தங்களுடைய வித்யா கௌரவத்தினுலும், அத்யாத்ம நிலையினுலும், தூயமான சரியையினுலும், ஸர்வ பூதங்களிலும் ஒரே மாதிரி வைத்திருந்த அன்பினுலும் எல்லாருடைய பக்தியையும் மரியாதையையும் பெற்றிருந்தார்கள். தேசத்தில் எவ்வளவு விதமான க்ஷோபங்கள் இருந்தும், அரசர்களும் குடிகளும் இவர்களிடத்தில் குன்ருத பக்தியுடையவர்களாயிருந்தார்கள். அக்காலத்திலுள்ள தக்ஷிண பிராந்தியத்தில் மஹமதிய

அரசர்கள் அரசாண்டு வரும் ஸமயம், அவர்கள் விஜய நகரம் ராஜ்யத்துடன் ஸ்நேகபாவத்துடனிருந்தாலும், சண்டையிட்டுக் கொண்டிருந்தாலும் சிருங்கேரி ஜகத்குருக்கள் ஸம்பந்தப்பட்ட மட்டில் அவர்களுக்கேற்பட்ட பாத்தியதைகளையும் மரியாதைகளையும் நன்கு பரிபாலித்ததுடன், யாராலும் அவைகளுக்கு எவ்வித இடைஞ்சலும் கெடுதலும் ஏற்படாமல் பாதுகாத்து வந்தார்கள்.

25வது ஆசார்யாரான ஸச்சிதாநந்த பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1622 முதல் 1663 வரை சுமார் நாற்பது வருஷங்கள் பீடாதிபத்யம் வகித்தார்கள். ஒரு ஸமயம் ஒரு விரோதி ஸைன்யம் அர்த்த ராத்திரியில் சிருங்கேரியில் படையெடுத்துத் தாக்கினபோது, இவ்வாசார்யாரின் பக்திப் பெருக்கினால் சிருங்கேரி திக்பாலக தேவதைகளான ஹநுமார் பைரவர், துர்க்கை, காளீ இவர்கள் ஆயுதம் ஏந்தி சத்ரு ஸைன்யத்தை விரட்டியடித்ததாகவும், அன்றிரவு ரக்தக்காயம் பட்ட அங்கங்களுடன் அத்தேவதைகள் ஆசார்யாரின் ஸ்வப்னத்தில் தர்சனம் கொடுத்ததாகவும் சொல்லப்படுகிறது. இவர்தான் சிருங்கேரியின் மத்தியிலுள்ள மலஹானிகரேசுவரர் ஆலயத்தில் அம்பிகை பவானிக்கும் ஓராலயம் கட்டிவைத்து கும்பாபிஷேகம் செய்து பலவித உத்ஸவாதிகளை ஆரம்பித்து வைத்தார். ராமசந்திர மஹோதயம், குரு சதகம், மீனாக்ஷீ சதகம் முதலிய காவ்யங்களையும் ஸ்தோத்ரங்களையும் இவர்கள் எழுதினதுடன், சில

காசி பண்டிதர்களைக்கொண்டு அவைகளுக்கு வியாக்யானங்களையும் எழுதச்செய்தார். சிருங்கேரி ஜாகீரில் ஏராளமாக பாக்குத் தோட்டங்கள் ஏற்படுத்தியும், சாகுபடிக்கு வேண்டிய பல அணைகளைக் கட்டியும், ஜாகீரை பலவிதத்தில் மதிப்புரும்படி செய்தார். அக்காலத்தில் கேலதி வம்சத்தில் மிகப்பிரஸித்த அரசராயிருந்த சிவப்பநாயக்கரின் வேண்டுகோளுக்கிசைந்து பலதடவை அவர் ராஜதானிக்கு விஜயம் செய்திருக்கிறார். அவ்வரசரின் உதவியைக் கொண்டு கி. பி. 1653ல் சிருங்கேரி ஜாகீரில் ஒருவிதமான தீர்வை நிர்ணயம் செய்யப்பட்டது. கி. பி. 1661ல் இவ்வரசரே 120 வராகனுக்கு மேல் பேரீஜுள்ள நிலங்களை ஸ்ரீமடத்திற்கு தானம் செய்து கொடுத்தார். அவர் அடிக்கடி ஸ்ரீ ஜகத்குரு அவர்களுக்கு எழுதியிருக்கின்ற கடிதங்களிலிருந்து அவருக்கு இருந்த மிகுந்த ஆசார்ய பக்தியும் கிருதக்ஞதையும் நன்கு தெரிகிறது.

இந்த ஆசார்யாருக்குப் பின் நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1663 முதல் 1705 வரை பீடத்திலிருந்தார். இவரிடத்திலும், அக்காலத்து கேலதி வம்சத்தரசர்களான பத்ரப்ப நாயக்கர், ஸோமஸுந்தர நாயக்கர், அவருக்குப்பின் அரசாண்ட ராணி சென்னம்மாம்பா இவர்கள் அப்படியே முன்னோர்களைப்போல, பக்தி சிரத்தை காட்டிவந்தார்கள்.

அடுத்த ஆசார்யார் ஸச்சிதானந்த பாரதீ

ஸ்வாமிகள். இவர் 1705 முதல் 1741 வரை பீடாதி பத்யம் வஹித்தார். மலஹானிகரேசுவரர் ஆலயம் சிருங்கேரி ஊரின் மத்தியில் குன்றின்மேல் இருக்கிற தென்று முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாலயத்தில் பிரவேசிக்கும்போதே வலது பக்கத் தில் ஒரு கல் தூணில் விக்நேசுவர மூர்த்தி முன் நீட்டிக்கொண்டிருப்பதையும் பின்புரம் தட்டிப் பார்த்தால் கல்லிற்குள் இடைவெளியிருப்பது போல் சப்தம் கேட்பதையும் அநேகமாய் யாரும் கவனித் திருக்கலாம். இவ்வாசார்யார் முதல் தடவை ஆலய தரிசனத்திற்குப் போனபொழுது கணேசருடைய விக்ரஹம் இல்லையென்று தெரிந்து கொண்டு உடனே ஒரு மஞ்சள் துண்டை எடுத்து பக்கத்திலுள்ள தூணில் கையால் கணேசருடைய மூர்த்தியை வரைந்து விட்டு அதற்கு பூஜை செய்து விட்டு பிறகு ஆலயத் திற்குள் சென்றூர். அது முதல் அம் மூர்த்தி கொஞ் சம் கொஞ்சமாக கல் தூணிலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இந்த அபூர்வ ஸம்பவம் 24வது ஆசார்யரான அபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் காலத்தில் நடந்ததாக குருவம்ச காவ்யத்தில் காணப்படுகிறது.

இவ்வாசார்யாருக்கு அடுத்தவர் அபிநவ ஸச்சிதா நந்த பாரதீ ஸ்வாமிகள். இவர் கி. பி. 1741 முதல் 1767 வரை பீடத்தில் இருந்திருக்கிறூர்கள். இவர் கி. பி. 1758ல் ஸோமஸுந்தர நாயக்கரின் பிரார்த் தனையின் பேரில் பிடாரூர் விஜயம் செய்தார். அச்

சமயம் அவ்வரசர் 360 வராகனுக்குமேல் பேரீஜுள்ள நிலங்களை மடத்திற்கு அர்ப்பணம் செய்தார். சிருங்கேரி ஸ்ரீ சாரதா தேவியின் நவராத்திரி உத்ஸவத்திற்கு கொண்டு போகப்படும் ஸகலவித ஸாமான்களுக்கும் சுங்க வரி கிடையாதென்று கி. பி. 1762ல் உத்திரவு பிறப்பித்தார். கி. பி. 1759 சுமாரில் இவ்வாசார்யார் ஸேது யாத்திரை ஸங்கல்பித்துப் புறப்பட்டவுடன், அப்பொழுது மைஸூர் ராஜ்யத்தில் அரசராயிருந்த இம்மடி கிருஷ்ணராஜ உடையார் தன் ராஜதானிக்கு வரவேண்டுமென்று அழைத்து ஸத்காரம் செய்ததுடன், இதன் ஞாபகார்த்தமாக வருஷம் ஒன்றுக்கு 1200 வராகன் பேரீஜுள்ள பேலவாடி என்ற கிராமத்தை ஸர்வ மான்யமாக தானம் செய்து கொடுத்தார். சில வருஷங்களுக்குப்பின் இம்மைஸூர் ராஜ்யம் நவாப் ஹைதர் அலிகான் என்பவரின் ஆளுகையில் வந்தது. சிருங்கேரி ஸம்ஸ்தானத்திற்கும், வடக்கேயுள்ள மஹாராஷ்டிர அரசர்களுக்கும் வெகுநாளாக நெருங்கின ஸம்பந்தமிருந்துவந்திருக்கிறது. அப்பொழுது பூனாவில் பீஷ்வாவாக இருந்த ரகுநாத ராவ், ஆசார்யார் தன் ராஜ்யத்திற்கு விஜயம்செய்து தன்னை அனுக்ரஹம் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்ததின் பேரில் ஆசார்யார் புறப்பட, பந்தோபஸ்துக்கு வேண்டிய துருப்புகளை நவாப் அனுப்பினதுடன், அந்த யாத்திரை செலவிற்கென்று ரூ. 10000 கொடுத்து வேறு விலையுயர்ந்த ஸன்மானங்களையும் அர்ப்பணம் செய்து, பூனாவுக்கு ஸௌகர்ய

மாய் போய் வருவதற்குள்ள ஸகல ஸௌகர்யங்களை யும் செய்துகொடுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாசார்யாருக்குப் பின் பட்டத்திற்கு வந்த அபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் கி. பி. 1767 முதல் 1770 வரை மூன்று வருஷங்கள் தான் பீடத் திலிருந்தார்.

அவருக்குப் பிறகு கி. பி. 1770ல் ஸச்சிதாநந்த பாரதீ ஸ்வாமிகள் பீடத்திற்கு வந்து கி பி. 1814 வரை ஆசார்ய ஸ்தானம் வஹித்தார்கள். இவர் காலத்தில் தான், ஹைதர் அலியின் மகனுன டிப்பு ஸுல்தான் என்பவர் மைஸூர் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து, உன்னதமான நிலையையடைந்து, கடைசியில் இங்கிலீஷ்காரரால் தோல்வியடையும்படி ஏற்பட்டது. இவ்வரசருக்கு பிரதான மந்திரியாயிருந்தவர் பூர்ணய்யா என்கிற பிராஹ்மணர். சிருங்கேரி ஆசார் யார் ஜபதபங்களைவிட சொக்கட்டான் ஆடுவதில் விசேஷ ருசியுடன் காலம் கழித்து வருகிறுர் என்று கேட்டு துக்கித்தார். இவ்வாசார்யார் மைஸூருக்கு விஜயம் செய்தபோது, அவருக்கு புத்தி போதிக்க இதுவே நல்ல தருணமென்று பூர்ணய்யாவுக்கு தோன்றி, பிரபலமான வித்வான்களைக் கூட்டி ஒரு ஸதஸ் நடத்த உத்தேசித்தார். அவ்வித்வான்களில் ஒருவரிடம் சாஸ்திர விஷயமாக வாக்யார்த்தம் சொல்ல வேண்டுமென்று ஆசார்யாரை கேட்டுக் கொண்டார். ஆசார்யாரும் ஸம்மதித்தார். ஆனுல்,

தன்னுடைய அந்தஸ்துக்கு இன்னொருவருடன் ஸமானமாய் உட்கார்ந்துகொண்டு வாக்யார்த்தம் சொல்வது உசிதமாகாததினால், தனக்கு முன்னால் தன் ரூபத்தை மறைத்து ஒரு திரை போட்டுவிட வேண்டுமென்று சொன்னார். அப்படியே செய்யப்பட்டு வியவஹாரம் ஆரம்பிக்கப்பட்டது. எல்லாரும் கேட்டு வியக்கும்படியாக மிகவும் மேலான ரீதியிலேயே விவாதம் நடந்தது. சில நாழிகைகள் சென்ற பிறகு, திரைக்குள்ளிருந்து வரும் த்வனி ஆசார்யாருடையது இல்லை போலும், பெண்குரல் போலும் பூர்ணய்யாவுக்குத் தோன்றினவுடன், லேசாக திரையை விலக்கி உள்ளே பார்க்கவும், அவ்விடம் ஸ்ரீ சாரதாம்பாளே உருவெடுத்து வீற்றிருக்கக் கண்டு திடுக்கிட்டார். பார்த்துக் கொண்டிருக்கையிலேயே அந்த ரூபம் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து ஆசார்யரின் ரூபமாக மாறுவதையும் கண்டு மிகவும் வியப்புற்றார். பிறகு திரையை எடுத்து விட்டு ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, அவர்களின் யோக்கியதையைப் பற்றி ஸந்தேஹித்த அபசாரத்திற்கு தன்னை மன்னித்து அருள வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டார்.

இந்த ஸம்பவத்திற்குப் பிறகு, இவ்வாசார்யாரிடம் திப்பு ஸுல்தான் எவ்வளவு கௌரவ புத்தி வைத்திருந்தாரென்பது அவர் மடத்திற்கு எழுதியிருக்கும் கடிதங்களிலிருந்து மிகவும் வெளிப்படையாகிறது. பகவானிடம் பிரார்த்திக்கும்படிக்கும், தான் உத்தேசிக்கும் கார்யங்கள் நிறைவேறும் பொருட்டு

ஆசீர்வதிக்க வேண்டுமென்றும் பலதடவை எழுதியிருக்கிறார். சில மஹாராஷ்டிர யுத்தபடர்கள் சிருங்கேரியில் புகுந்து கொள்ளையிட்டதாக திப்பு ஸுல்தானுக்குத் தெரிந்தவுடன், நஷ்டத்திற்கு ஈடு தானே செய்து கொடுத்தார். ஜகத்குருவின் உபயோகத்திற்காக ஒரு பல்லக்கு அர்ப்பணம் செய்து "எதிரிகள் தலைதூக்காமல் தோல்வியடையவும், என் ஸைன்யம் வெற்றியடையவும், என்னுடையவும் என் ராஜ்யத்தினுடையவும் க்ஷேமம் அபிவிருத்தி யடையவும்" பகவானை பிரார்த்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறார். தன்னுடைய சத்ரு ஸைன்யங்கள் யாவற்றும் நாசமடைய ஸஹஸ்ர சண்டீயாகம் செய்யவேண்டும் என்றும், அதற்கு நாற்பது நாள் வரை பிரதிதினம் ஆயிரம் பிராஹ்மணர்களுக்கு ஸந்தர்ப்பணம் செய்யவேண்டும் என்றும், ஆசார்யாரைக் கேட்டுக்கொண்டதுடன், பூராச் செலவையும் திப்பு ஸுல்தானே வஹித்தார் என்பது விசேஷமாக குறிப்பிடத்தக்கது. இந்த ஹோமம் மிகவும் ஸபலமாக ஏற்பட்டதென்று, பின் ஒரு கடிதத்தில் நன்றியுடன் தெரிவித்துக்கொள்கிறார்.

ஒரு ஸமயம் பூனாவிற்கு பீஷ்வாவின் அழைப்பின் பேரில் ஆசார்யார் போகும் ஸமயம், தன் இருப்பிடமான ஸ்ரீரங்கபட்டணம் வந்துவிட்டுப் போகவேண்டுமென்று இவர் கேட்டுக்கொண்டார். அந்த ஸமயம் பூனாவில் ஆசார்யார் வெகுநாள் தாமதித்துவிட்டபடியால், இனி தாமஸமன்னியில் மைசூர் ராஜ்யத்திற்குத்

திரும்பி வந்து அனுக்ரகிக்க வேண்டுமென்று திப்பு சுல்தான் பிரார்த்திக்கையில் "தாங்கள் தங்குமிடம் எல்லாம் மழை ஏராளமாக பெய்கிறது, ஸஸ்யாதிகள் நன்கு விருத்தியாகின்றன, பிரஜைகள் ஸகலவிதமான ஐசுவர்யத்துடன் விளங்குகிருர்கள்'' என்று கண்டிருக்கிருர். பின்ஞல் ஒரு கடிதத்தில் தன்னுடைய பலமும் பூர்ணமான நம்பிக்கையும்' ''பகவானுடைய கிருபை, ஸ்ரீஸந்நிதானத்தின் ஆசீர்வாதம், ராஜ்யத்தின் ஸேஞ பௌருஷம்'' ஆகிய இம்மூன்றையே ஆசிரயத்திருக்கிறதென்கிருர். கூடிய சீக்கிரம் சிருங்கேரிக்கே நேரில் வர ஆசைப்படுவதாகவும் எழுதியிருக்கிருர். ஆனல் இவ்வாசை பூர்த்தியானதாகத் தெரியவில்லே. கி. பி. 1799ல் திப்பு சுல்தான் தோல்வியுற்று யுத்த களத்தில் இறந்த பிறகு, முன் உள்ள இந்து அரச பரம்பரையே திவான் பூர்ணய்யாவின் ஆதரவில் ராஜ்ய நிர்வாஹம் செய்ய ஆரம்பித்ததென்பது யாரும் அறிவார்கள். அவர் மடத்து சொத்துக்களேயும் பாத்தியதைகளேயும் மிகவும் ஊக்கத்துடன் ஸம்ரக்ஷித்துக் கொடுத்து பல விதத்தில் உதவி செய்திருக்கிருர். இந்து அரசர் மறுபடியும் ஸிம்ஹாஸனம் ஏறியபின், தன்னே ஆசீர்வதிக்க வேண்டுமென்று அவரால் பிரார்த்திக்கப்பட்டு, ஆசார்யார் கி. பி. 1811–1812ல் மைஸூருக்கு விஜயம்செய்தார். இவ்வாசார்யர் கி. பி. 1814 வரை பீடத்திலிருந்தார்கள். இவருக்குப்பின் வந்த அபிநவ ஸச்சிதாநந்த பாரதீ ஸ்வாமிகள், மூன்று வருஷங்களே அதாவது கி. பி. 1814 முதல் 1817 வரை, ஆசார்ய பீடாதிபத்யம் வகித்தார்கள்.

## அத்யாயம் 8

### நவீன ஆசார்யார்கள்

ஸ்ரீ சாரதா பீடத்தில் 32வது பட்டத்தில் வந்த நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் மஹாதபஸ்வீ, மஹா யோகீ. அவர் ஆசார்ய ஸ்தானத்திற்கு கி. பி. 1817ல் வந்து 1879 வரை அதாவது சுமார் 62 வருஷங்கள் பீடாதிபத்யம் வகித்திருக்கிறார்கள். இதில் 40 வருஷம் வரை யாத்திரையிலேயே செலவழித்தார்கள். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் ஏற்படுத்திய மடங்களில் பிரதானமான இம்மடத்திலுள்ள ஆசார்யாருக்கு ஏற்பட்ட கௌரவத்திற்கு தக்கபடி மஹாராஜாக்களும், ராஜாக்களும், மற்றும் பிரபுக்களும் உத்தமமான மரியாதைகளைக் காட்டிவந்தார்கள். அநேகம் மஹாராஜாக்களும், பிரபுக்களும் தங்கள் இருப்பிடமிருந்து வெகுதூரத்திலேயே இவர்களை எதிர்கொண்டழைத்து இவர்கள் வீற்றிருக்கும் பல்லக்கை தூக்குகிற பாவனையாகப் பிடித்துக்கொண்டு பாதசாரிகளாகவே அழைத்துச் செல்வார்கள். இவர்களுடைய தபோபலத்தைக்கண்டு இவர்கள் என்ன கட்டளையிட்டாலும் அதை நிறைவேற்ற யாரும் ஸித்தமாயிருந்தார்கள். இவர்களுடைய அதிருப்தி ஏற்பட்டால் தங்களுக்கு உடனே ஏதாவது கெடுதல் ஏற்படுமென்ற பயம் இருந்தது. இவருக்கு பசியாவது நித்திரையாவது இருந்ததாகத் தெரியவில்லை. இவருடைய தீவிரமான தபோ நிஷ்டையையும், வியக்கத்தக்க யோகசக்திகளை

யும் மனோ நிச்சயத்தையும், நிர்மல ஸ்வபாவத்தையும், பக்தியின் பெருமையையும் மற்றுமுள்ள மஹிமைகளை யும் இவருடைய ஜீவ்ய காலத்தில் நடந்த பலவித ஸம் பவங்களால் எடுத்துச் சொல்லிக்கொண்டே யிருக்க லாம். தனியாகவே இவருடைய சரித்திரம் பிரசுரமா யிருப்பதால் இங்கு விஸ்தரிக்கவில்லை. இவருக்கு அநேக பாஷைகள் நன்கு தெரியும். கி. பி. 1866ல் தனக்குப்பின் பட்டத்திற்கு வரவேண்டியதற்காக, மைசூர் ஸம்ஸ்தானம் ஆஸ்தான பண்டிதரான குனிகல் ராமசாஸ்திரிகளின் புத்திரரான எட்டு வயது உள்ள சிவஸ்வாமி என்ற சிறுவரைக் குறிப்பிட்டு அவருக்கு ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ என்ற யோகபட்டத்துடன் ஸன்யாஸம் கொடுத்தார். அப்படியே தென் மாகாணங்களில் யாத்திரை செய்துவிட்டு சுமார் பன்னிரண்டு வருஷங் கள் கழித்து பாலஸ்வாமிகள் ஸஹிதம் சிருங்கேரிக்கு திரும்பி வந்தார். அதற்கு சிலநாள் கழித்து அதாவது 1879ல் தன்னுடைய 82வது வயதில் இப்பூதவுடலை விட்டு கைவல்யமடைந்தார்.

33வது ஆசார்ய ஸ்தானத்திற்கு வந்த இந்த ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமி கள் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதரின் அவதாரமென்றே சொல்ல வேண்டும். இவர் ஸன்யாஸம் பெற்ற தினம் கிரியைகள் முடிவதற்கு ஸாயங்காலம் வரை ஆகி விட்டபடியால் சிரமமிருக்குமென்று நினைத்து இப் பாலகரை விச்ராந்தி எடுத்துக் கொள்ளும்படி குரு

நாதர் ஆக்ஞையிட, இவர் கொஞ்சம் கண் அசர்ந்த ஸமயம் இவர் வாக்கிலிருந்து "ஸோஹம்" என்ற சப்தம் வெளிவருவதைக் கேட்டு யாவரும் ஆச்சர்யப் பட்டார்கள். இவ்வத்வைத நிலை ஸித்திக்க வேண்டு மென்றே ஸகல வித்வான்களும் பிரயத்தினம் செய்து ஸித்தியடையாமலிருக்க, இவருக்கு தானுகவே இந்த உன்னத மனோபாவம் ஏற்பட்டிருந்தது ஆச்சர்ய மல்லவா? நாளுக்குநாள் எல்லாவிதத்திலும் மேன்மை பெற்று யாவராலும் போற்றப்பட்டவரானுர். இவ ரைப் பார்த்தவர்களோ இவரைப்பற்றி கேட்டவர் களோ யாராயிருந்தாலும் இவரிடம் உடனே ஈடுபட் டவர்களாகி விடுவார்கள். இவருடைய வசீகரமான தோற்றம், புன்சிரிப்புடன் கூடிய முகம், பலவித சாஸ்திரப் பயிற்சி, எல்லையில்லாத காருண்யம், குழந்தைபோலுள்ள நிர்மல ஸ்வபாவம், பொது வாக எல்லாரிடத்திலுமே ஹித புத்தி, வைதிக சிரத்தை, சாஸ்திர நம்பிக்கை, தீவிரமான தபஸ், ஸ்வபாவ தூய்மை, அத்யந்தஸௌலப்யம், பெருந் தன்மை, விசாலமான நோக்கம், இணையற்ற ஆத்ம குணம், ஸர்வ பூதங்களிடத்திலும் தயை, கவரக்கூடிய ஸல்லாபம், அத்புதமான ஞாபக சக்தி, நிரதிசயமான ஔதார்யம், முதலிய அனந்தமான மஹிமை பெற்ற குணங்களில் ஈடுபடாமல் யாரால் இருக்கமுடியும்? அவர் செய்திருக்கும் தர்ம கார்யங்கள் பலவுள. அவருடைய ஞானம் எல்லா விஷயத்தையும் கவரும். அவருடைய பக்தி எல்லை கடந்தது. அவருடைய

தயை அபரிமிதமானது. அவருடைய தூய்மை கிட்ட நெருங்குகிறவர்களேயும் பரிசுத்தப்படுத்தும். அவருடைய அத்புதமான வசிகர சக்தியின் பெருக்கால், ஆஸ்திக்யமில்லாத ஸாமான்ய ஜனங்கள் கூட அவருடைய ஒரு வார்த்தையை கேட்டு, ஒரு புன்சிரிப்பைக் கண்டு, அல்லது அவருடைய கருணுதிருஷ்டியில் பட்டு, பலர்கள் மிகவும் பக்திமான்களாக ஏற்பட்டு குரு ஸேவையில் நிரந்தரம் ஈடுபட்டவர்களாகி யிருக்கிருர்கள். லௌகிக ஸம்பத்திற்காவது அந்தஸ்துக்காவது அவர் மதிப்புக் கொடுப்பதில்லே. பக்தி ஒன்றினுல் தான் அவரிடம் நெருங்க முடியும். அவருடைய ஸ்வபாவ நைர்மல்யம், வித்யா கௌரவம், அனன்ய பக்தி, பூத தயை, ஸல்லாப சாதுர்யம் இவைகளால் அவர் சோபித்ததுடன் அவர் ஓர் பெரிய ராஜயோகியும் ஸித்த புருஷருமாவார். அவருடைய எல்லேயற்ற ஞான வைபவத்தையாவது, எல்லேயற்ற ஸமுத்ரம் போலுள்ள பக்தி பிரவாஹத்தையாவது, கருணேயின் வெள்ளத்தையாவது, தூய்மைக்கே இருப்பிடமாம் தன்மையையாவது, கல்யாண குணங்கள் யாவற்றும் இவரிடம் மூர்த்தீகரித்திருந்த பெருமையையாவது, வைராக்ய நிஷ்டையையாவது யாரால் வர்ணிக்க முடியும். பக்தர்களுக்கு ஹிதம் செய்வதையே நோக்கமாகக் கருதி உறுதியான ஸங்கல்பத்துடன் லோக க்ஷேமார்த்தம் பாடுபட்டு வந்தார்.

இவர் செய்திருக்கின்ற கார்யங்களே எடுத்துச்

சொல்வது ஸாத்தியமாகாது. [1] சிலவற்றை மாத்திரம் குறிப்பிடலாம். சிருங்கேரியில் சந்திர மௌளீசுவரர் தொட்டி என்ற அரண்மனையைக் கட்டியதுடன் ஸ்ரீ மடம் கட்டிடங்களைப் புதுப்பித்து அக்கரையில் ஸச்சிதாநந்தவிலாஸம் முதலிய அழகான வாஸஸ்தலங்களை கட்டியிருக்கிறார்கள். பங்களூரில் வேதாந்தத்திலும் பூர்வமீமாம்ஸையிலும் மேல் படிப்பு சொல்லிக்கொடுக்க சங்கர மடத்தை ஏற்படுத்தியது, ஸ்ரீசங்கரபகவத்பாதரின் ஜன்மபூமியான கேரளத்திலுள்ள காலடி க்ஷேத்திரத்தைக் கண்டுபிடித்து அங்கு ஸ்ரீசங்கரருக்கு ஓர் ஆலயமும் ஸ்ரீசாரதாம்பாளுக்கு ஓர் ஆலயமும் ஏற்படுத்தி கும்பாபிஷேகம் செய்து, அங்கேயே அவ்விரண்டு ஆலயங்களுக்கும் முன்புரம் பூர்ணா நதிக் கரையில் வெகு அழகான படித்துறையை நிர்மாணம் செய்தது, ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸம் அச்சுக்கூடம் மூலமாக ஆதிசங்கர பகவத்பாதருடைய கிரந்தங்கள் எல்லாவற்றையும் மிக அழகான ரீதியில் அச்சிட்டு பிரசுரிக்கச் செய்தது, முதலானவைகளே ஸாமான்ய ஜனங்களை கவர்ச்சி செய்யப் போதுமானவை. காலடியில் ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ சாரதாம்பாள் இவர்கள் மூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்வதற்காக தக்ஷிண தேசத்தில் கி. பி. 1907 முதல் யாத்திரை செய்து கி. பி. 1911ல் சிருங்கேரிக்குத் திரும்பிவந்தார். தன்னுடைய அவதாரப் பிரயோஜனம் நிறைவேறியாகி விட்டதென்று

---

1. ஆசார்யேந்திர விஜயம் என்ற பெயருடன் இவருடைய சரித்திரம் தனியாக அச்சிடப்பட்டிருக்கிறது. விலை 0—12—0

தீர்மானித்து 1912 மார்ச்சில் விதேஹ கைவல்யம் அடைந்துவிட்டார்கள்.

அவர்களுக்குப்பின் பீடாதிபத்யம் வகித்துவந்த ஸ்ரீசந்திரசேகர பாரதீஸ்வாமிகள் பட்டத்திற்கு வந்த வுடன் மூன் ஆசார்யார் ஆரம்பித்து பூர்த்தியாகாம லிருந்த ஸ்ரீ சாரதாம்பாள் ஆலய நிர்மாணத்தைப் பூர்த்திசெய்து விடவேண்டுமென்றும் முன் ஆசார்யா ரின் ஸமாதி ஸ்தலத்தில் ஓர் தக்க ஆலயம் கட்ட வேண்டுமென்றும் ஸங்கல்பித்து கி. பி 1916க்குள் கட்டிடங்களைக் கட்டிவைத்து அதிவிமர்சையாகக் கும்பாபிஷேகம் செய்துவைத்தார்கள். காலடியில் 1910ல் மூன் ஆசார்யார் நடத்தின கும்பாபிஷேக வைபவத்தையே இது எவ்விதத்திலும் ஒத்திருந்தது. இவருடைய குருபக்தி அபாரமானது. இவருடைய குரு த்யானவைபவத்தினுல் இவருடைய சரீரத்தோற் றம்கூட, பிரமர கீட நியாயப்படி, முன் ஆசார்யா ருடையதைப் போலவே ஏற்பட்டுவிட்டது. அநேகர் இவரைப் பார்த்து பூர்வாசார்யார்தானே என்று பிரமிப்பதுமுண்டு. இவருடைய சாஸ்திர ஞானம் எல்லை கடந்தது. இவரிடம் சாந்தியே மூர்த்தீகரித் திருக்கிறதென்று சொல்லலாம். தன் குருநாதர் சென்ற வழியிலேயே தானும் செல்லவேண்டுமென்ற ஊக்கமுடையவர். கி. பி. 1923 முதல் 1927 வரை தென் தேசத்தில் யாத்திரை செய்த ஸமயம் ஸகல ஜனங்களாலும் எல்லாவிடங்களிலும் மிகவும் அன்பு டனும் மரியாதையுடனும் வரவேற்கப்பட்டார். இவ

ருடைய வசீகரமான பிரவசன சக்தியின் மஹிமை யினுல் நாஸ்திகர் அநேகர் அவ்வழியை விட்டு ஆஸ்திக ராகியிருக்கிறுர்கள். இவருடைய வாத்ஸல்யத்தினு லும் உதவியினுலும் அத்யாத்ம நிலேயில் மேற்சென்ற வர்கள் அநேகர்.

இவர் காலடியில் வேதாத்யயனத்திற்காக ஒரு பாடசாலேயும் வேதாந்தத்திற்கு ஒரு பாடசாலேயும் ஏற்படுத்தியதுடன் அங்கே ஒரு அக்ரஹாரத்தையும் கட்டிக் கொடுத்திருக்கிறுர். மைஸூரில் தன் குரு நாதர் ஜனித்த கிருஹத்தையும் பக்கத்திலுள்ள மனே களேயும் மடத்திற்கு ஸ்வாதீனமாக்கி அங்கே ஓர் அழகான கல் கட்டிடம் கட்டி அதில் அமிருத சிலேயில் குருநாதரின் ரமணீயமான மூர்த்தியை 1927ல் தக்ஷிண தேச யாத்திரையிலிருந்து திரும்பி வரும்போது பிர திஷ்டை செய்தார்கள். 1939ல் பங்களூர் சங்கர மடத்தில் ஏற்கனவே முன் ஆசார்யார் பிரதிஷ்டை செய்திருந்த ஸ்ரீ சங்கர பகவத்பாதருடைய ஆலயத் திற்கு எதிரில் ஸ்ரீ சாரதாம்பாளுக்கும் ஓர் அழகான ஆலயம் கட்டி கும்பாபிஷேகம் செய்தார்கள். இவர் யோகத்தில் மேல் நிலேயிலிருப்பவர். இவருடைய வித் யையையும், பிரவசன சக்தியையும், அதிலும் வெகு தெளிவான நடையில் ஸம்ஸ்கிருதத்தில் பேசும் திறமையையும், கண்டு இப்பரத கண்டம் பூராவும் ஆச்சர்யப்படாத வித்வான்கள் கிடையாது. ஸகல விதமான கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாயும், எப்பொழுதும் ஸகல பிராணி வர்க்கங்களின் க்ஷேமத்

திலும் முன்னேற்றத்திலுமே வேகமுடையவராயும், குரு பக்திக்கு ஓர் நிதர்சனமாகவும் இவர் இருந்து எவ்வித ஆடம்பரத்தையும் ஒழித்து உன்னதமான அத்யாத்ம நிலையிலிருந்து கொண்டு எங்கும் சாந்தியும் தூய்மையும் பரவும்படி செய்து வந்தார்.[1]

கி. பி. 1931ல் இம்மஹான் ஒரு சிஷ்யரை ஸ்வீகரித்துக்கொண்டு அவருக்கு அபிநவ வித்யா தீர்த்தர் என்ற யோகபட்டம் கொடுத்து அவருக்கு வித்யாப்யாஸத்திற்கும் ஆசிரம ஸம்பிரதாய அனுஷ்டானங்களுக்கும் வேண்டிய ஸௌகர்யங்களை செய்து கொடுத்ததுடன் தானும் அநேக ஸமயங்களில் இவ்விஷயத்தில் நேரிலேயே கவனித்துவந்தார். பின்னும் இவர் அநேகமாய் எப்பொழுதும் ஆத்மநிஷ்டையிலேயே இருந்துகொண்டு லௌகிக வியவஹாரங்களில் கொஞ்சமேனும் ஈடுபடாமலிருந்து வந்தார். அபூர்வமாக சில சமயங்களில் சில பாக்யசாலிகளுக்கு தர்சனம் கொடுத்து அநுக்ரகித்தும் வந்தார். கடைசியாக 1954 மஹாளய அமாவாஸ்யை யன்று பிராரப்த கர்மா முடிவடைந்ததை உணர்ந்து துங்கா நதியிலேயே உடலை உதறி விட்டு கைவல்ய நிலையடைந்தார். அது முதல் ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகள் பீடாதிபத்யம் வகித்து வருகிறார்கள். ஸ்ரீ சாரதாம்பாளின் அனுக்ரஹத்தினால் ஸ்ரீ மடம் ஆதி முதல் பெற்றிருக்கும் மேன்மையையும் கௌரவத்தையும்

---

1. இவருடைய சரித்திரம் முழுவதும் விஸ்தாரமாக தமிழிலும் இங்கிலீஷிலும் தனித்தனியாக அச்சிடப்பட்டிருக்கிறது. விலை 0-12-0

ஒவ்வொரு ஆசார்யாரும் தங்களுடைய விசேஷ மஹிமையால் விருத்தி செய்து கொண்டே வந்திருப்பதையனுஸரித்து இம் மடம் எப்பொழுதும் குன்ருத வைபவத்துடன் விளங்கி வரும் என்பதில் ஸந்தேஹம் இல்லை.

---

## அத்யாயம் 9

### ஸ்ரீ மடம் நிர்வாஹம்

இப்பரத கண்டத்தின் நான்கு திக்குகளிலும் ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார் மடங்களை ஸ்தாபித்ததின் கருத்து அந்தந்த திக்குகளிலுள்ள சிஷ்யர்களின் ஆத்யாத்மிக சிரேயஸ்ஸை நன்கு கவனிக்க வேண்டியதென்பது வாஸ்தவமாயிருந்த போதிலும் ஏதோ அந்தந்த திக்குக்களிலுள்ள தேசங்களை லௌகிக ரீதியில் விபாகம் செய்து கொடுத்து அந்தந்த மடங்களுக்கு தனித்தனி பாத்தியதைகள் ஏற்படுத்தி அதிகார வரம்பு போட்டுக் கொடுத்த மாதிரி நினைப்பது சரியல்ல. தன்னுடைய அதிகாரம் சிஷ்யர்களுடைய மனதுகளின் பேரிலேயே தவிர அவர்கள் வஸிக்கும் ஊர்களின் பேரிலில்லை யென்று பூர்வாசார்யார்கள் சொல்வார்கள். இக்காரணத்தினுலேயே இந்நான்கு மடங்களும் இப்பரத கண்டத்தின் பொதுவான சிரேயஸ்ஸை உத்தேசித்து ஒத்துழைத்து வந்திருக்கின்றன. தன் ஸமீபத்திலுள்ள மாகாணத்தின்

க்ஷேமம் மாத்திரம் தன் பொறுப்பு என்றுணராமல் பரத கண்டம் பூராவுமே தன் பொறுப்பில் சேர்ந்த தென்ற மனோபாவத்தின் பேரில் தான் ஒவ்வொரு மடாதிபதிகளும் இப்பரத கண்டம் பூராவும் ஸஞ்சரித்து ஆதி சங்கர பகவத்பாதருடைய சிஷ்ய பரம்பரையை சேர்ந்தவரென்ற முறையில் ஸகல விதமான மரியாதையுடன் ஸகல ஜனங்களாலும் விசேஷமாக ஸத்காரம் செய்யப்பட்டு அவர்களை அனுக்ரஹித்து வந்திருக்கிறார்கள்.

கலியுகத்தின் வைபவம் முற்றி, ஜனங்களுக்கு பாபத்தில் பயமும் பரலோகத்தில் நம்பிக்கையும் குன்றிவர ஆரம்பித்தவுடன் நம் தேசத்தின் ஆத்யாத்மிக சிரேயஸ்ஸை பாதுகாக்க வேண்டுமானால் ஆசார்ய ஸ்தானம் வஹிப்பவர்களுக்கு தர்மரக்ஷணையின் பொருட்டு லௌகிகமான அதிகாரமும் இருக்க வேண்டியதவசியமென்று தெரிந்தது. தவிரவும் சிஷ்யர்களின் மனதை ஆவர்ஜனம் செய்யக்கூடிய நிலையில் மடங்களும் நடத்தப்படவேண்டுமென்று தெரிந்தது. இவ்விரண்டு அம்சங்களையும் நன்கு உணர்ந்த வித்யாரண்ய முனிவர் விஜயநகரம் ஸம்ஸ்தானத்தின் உதவியினால் லௌகிக ஸம்பத்தையும் அந்தஸ்தையும் ஏற்படுத்திக் கொடுத்து ஸாமான்யமான மனிதர்களுக்குக்கூட ஸ்ரீ மடத்தில் விசேஷமான மதிப்பும் கௌரவமும் ஏற்படும்படி செய்தார்.

ஸ்ரீ வித்யாரண்யரின் ஏற்பாட்டின் பேரில் அவருக்கு முன் ஆசார்யாராயிருந்து வந்த ஸ்ரீ பாரதி

கிருஷ்ண தீர்த்தர் பெயருக்கு ஹரிஹர மஹாராஜாவும் அவர் ஸகோதரர்களும் சேர்ந்து கி. பி. 1346ல் ஏராள மான நிலங்களை அர்ப்பணம் செய்தார்கள். பிறகு அவ்வாசார்யாருக்கும் பின்னுல் ஸ்ரீ வித்யாரண்யருக் கும் அவ்வரசனே வேறு சில சாஸனங்கள் மூலமாக நிலங்களைக் கொடுத்தான். பின்னுல் வந்த பீடாதிபதி களுக்கும் ஸமயோசிதமாய் அவ்வப்பொழுதுள்ள அரசர்கள் பல காலங்களில் அநேக நிலங்களை ஜாரி செய்து கொடுத்திருக்கிருர்கள். இப்பொழுது சிருங் கேரி ஜாகீர் என்பது மைஸூர் ஸம்ஸ்தானத்தின் வடமேற்கிலுள்ள கடூர் ஜில்லா கொப்பம் தாலூகா வில் உள்ளடங்கியது. இதற்குள் அநேகம் கிரா மங்கள் இருக்கின்றன. மைஸூர் ஸம்ஸ்தானத்திற்கு வெளியிலும் இப்பாரத தேசம் பூராவிலும் பல இடங் களில் ஸ்ரீ மடத்திற்கு ஏராளமான கட்டிடங்களும் பூஸ்திதிகளும் இருந்துவருகின்றன. வடக்கே ஹரித் வாரம் காசி கயா முதலான இடங்களிலும், தெற்கே ராமேசுவரம் மதுரை திருநெல்வேலி முதலான இடங் களிலும், மேற்கே கோகர்ணம் நாஸிகம் முதலான இடங்களிலும், கிழக்கே சென்னை காஞ்சீபுரம் திருப்பதி முதலான இடங்களிலும், இருந்து வருகின் றன. ஆஸ்திகர்களான சிஷ்யர்களும் மஹாராஜாக் களும் ஏராளமாக தானம் செய்திருந்த போதிலும் அந்தந்த தானங்கள் அநேகமாய் இந்த இந்த தர்ம நிர்வாஹத்திற்காக என்று குறிப்பிட்டே நவராத்திரி மஹோத்ஸவச் செலவு முதலானவைகளுக்காக விடப்

பட்டிருப்பதினால் ஸ்ரீ மடத்தின் இஷ்டப்படி செல வழிக்கும்படியாக மிஞ்சக் கூடியது மிகவும் ஸ்வல் பமேயாகும். ஆகையால் காலடி பங்களூர் முதலிய இடங்களில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனங் களுக்கு சிஷ்யர்களுடைய ஸஹாயத்தையே எதிர்பார் க்க வேண்டியதாயிருக்கிறது.

இம்மடத்திற்கு ஆதி முதற்கொண்டே ஆசார விசார அதிகாரம் இருந்து வந்திருக்கிறது. அதாவது யாரேனும் சிஷ்யர் தர்ம சாஸ்திரத்தை மீறி நடந்தால் அவரை கண்டிக்கவும், அபராதம் போடவும், பிராயச் சித்தம் விதிக்கவும், அவசியமானால் ஜாதியிலிருந்து விலக்கவும், பாத்தியதை யுண்டு. அப்படியே தன் சிரேயஸ்ஸை நாடி தன்னிடம் வரும் சிஷ்யர்களுக்கு ஸதுபதேசம் செய்து நன்னடத்தையில் பயிற்சி கொடுத்து கை தூக்கி விடவேண்டிய பொறுப்பையும் ஆசார்யர்கள் வஹித்து வந்திருக்கிறார்கள். திப்பு ஸுல்தான் காலத்தில், ஸர்க்கார் உத்யோகஸ்தர்களும் வேலைக்காரர்களும் ஸ்வர்ணஸ்தேயம் முதலான பாபங்களையோ மற்றும் சில்லரை குற்றங்களையோ செய்தால் இவைகள் விஷயமாய் விசாரித்து தண்டிக்க ஸர்க்காருக்கே அதிகாரமிருந்தபோதிலும் இவைகளைப் பற்றி ஆசார்யாரே விசாரணை செய்து யுக்தம்போல் தண்டிக்கலாமென்று உத்தரவிட்டிருந்தான். தவிர வும் வாரீஸ் அன்னியில் இறந்து போகும் சிஷ்யர் களின் சொத்துக்கள் குறிப்பிட்ட ஒரு மதிப்பு வரை ஸ்ரீ மடத்தையே சேரும் என்றும் அம்மதிப்புக்கு மேல்

போன சொத்துக்களை ஸர்க்காருக்குத் தெரிவித்து விட்டு ஸ்ரீமடமே எடுத்துக் கொள்ளலாமென்றும் சட்டமிருந்தது. தவிரவும் ஜாகீருக்குள் நிலத்தின் மேல் வாரத்தைத் தவிர பூமிக்குள் அகப்படக் கூடிய ரத்னம் முதலிய எல்லா பதார்த்தங்களும் மற்றும் எல்லா வித வருமானங்களும் மடத்தையே சேர்ந்தவை. தீர்வையோ சுங்கமோ யாதொன்றும் கிடையாது. மேலும் இதர ஜாகீர்தார்கள் எப்படி ஸம்ஸ்தான அவசியத்திற்குத் தக்கபடி ஸைன்யத்திற்கோ மற்றும் வேறு காரியங்களுக்கோ ஆட்கள் அனுப்ப வேண்டுமென்ற நிர்பந்தத்திற்கு உள்பட்டவர்களோ, அது மாதிரி பொறுப்பு யாதொன்றும் இந்த ஜாகீருக்கு கிடையாது. பிரிட்டிஷ் ஸர்க்கார் ஆளுகைக்கு வந்த பிற்பாடும் கூட, ஆசார விசார ஸம்பந்தமாய் ஆசார்யார், அபராதம், ஜாதி விலக்குவது முதலான கட்டளை இடுவார்களேயானால் அதன் பேரில் அதை மாற்றிக் கொடுக்க வேண்டுமென்று ஸர்க்காரிடம் கேட்க முடியாதென்று கி. பி. 1839ல் உத்திரவு பிறந்திருக்கிறது.

சிஷ்யர்களின் கிருஹத்தில் நடக்கும் விவாஹம் உபநயனம் முதலான சுப ஸந்தர்ப்பங்களில் ஆசார்ய ஸம்பாவனையாக சிறு காணிக்கைகள் கொடுப்பது வெகுநாளாக ஏற்பட்டிருக்கிறது. இத்துகைகளை அந்தந்த ஊரிலிருக்கிற பிரமுகர்களே வசூல் செய்துகொள்வார்கள். சில ஸமயம் மடத்திற்கு அனுப்புவார்கள். அநேகமாய் மடத்தின் ஸம்மதம் பெற்று அந்த அந்த

ஊரில் நடக்கும் பொதுவான வைதிக கார்யங்களுக்கு உபயோகித்துக் கொள்வார்கள். மேலும் ஸர்க்கார் தனக்கு ஏற்பட்ட நிலத்தீர்வையை வசூலிப்பதுடன், நிலஸ்வான்தார்களிடமிருந்து 'சங்கராசார்ய பிக்ஷை' என்று ஸ்வல்பத் துகையை வசூலித்து ஸ்ரீ மடத்திற்குக் கொடுத்து வந்திருப்பதாக தெரிகிறது. இந்த வழக்கம் பிரிட்டிஷ் ஸர்க்கார் அதிகாரத்திற்கு வந்த பிறகும் அமுலிலிருந்து வந்து, கொஞ்ச நாள் சென்ற பிறகு இத்துகையையும் ஸர்க்கார் தீர்வை யென்றே சேர்த்து வசூலித்துக் கொண்டு வருஷத்திற்கு ஒரு தடவையாக ஸர்க்காரிலிருந்தே ஸ்ரீ மடத்திற்கு கொடுத்து வந்திருக்கிறார்கள். 'சங்கராசார்ய பிக்ஷை' என்று கண்டிருக்கும் நிலப்பட்டா ஒன்று இன்னமும் திருநெல்வேலி சிருங்கேரி மடத்தில் இருந்து வருவதுடன் ஸர்க்காரிலிருந்து பிரதி வருஷம் ரொக்க மானியமும் வந்துகொண்டிருக்கிறது.

சிருங்கேரி பீடாதிபதிகளிடம் இப்பரத கண்டத்திலுள்ள அரசர்கள் எவ்வளவு மதிப்பும் கௌரவ புத்தியும் வைத்திருந்தார்களென்பது மடத்திலுள்ள தஸ்தாவேஜுகளிலிருந்து நன்கு புலப்படுகிறது. ஹிந்து அரசர்கள் மட்டுமன்னியில் ஹைதராபாத் நைஜாம் முதலிய மஹமதிய அரசர்களும் கிழக்கு இந்தியா கம்பெனியாரும் அப்படியே மரியாதை வைத்து வந்திருக்கிறார்கள். அவரவர்கள் ஸர்க்கார் முத்திரையுடன் பிறப்பித்திருக்கும் உத்திரவுகளில் வைதிக தர்மானுஷ்டான விஷயமாகவோ தர்மத்தை

மீறி நடப்பவர்கள் விஷயமாகவோ ஆசார்யார் ஆக்ஞை செய்யும் கார்யங்களை ஸர்க்கார் உத்யோகஸ்தர் வேண்டிய உதவி செய்து கூடவிருந்து நிறைவேற்றிக் கொடுக்க வேண்டுமென்று கண்டிருக்கிறது. தத்காலத்தில் மத விஷயத்தில் பொது நிலையென்று சொல்லிக்கொண்டு மதமொன்றுமேயில்லாமல் செய்யும் ஆட்சி முறையில் இவ்வுத்தரவுகளெல்லாம் விசித்திரமாகத் தோன்றும்.

அக்காலத்து அரசர்கள் தங்கள் பிரஜைகளில் ஹிந்துவாயிருப்பவர் ஹிந்துமதக் கொள்கைப்படி நடக்க வேண்டுமென்றும் மஹமதியர் மஹமதிய மதக் கொள்கைப்படி நடக்க வேண்டுமென்றும் மற்றுமுள்ள பிறமதஸ்தர்களும் தங்கள் தங்கள் மதக் கொள்கைப்படி நடக்க வேண்டுமென்றும் அவ்விதம் நடந்து வரவேண்டிய ஸௌகரியங்களைச் சரியாக செய்து கொடுத்து பாதுகாத்து வரவேண்டிய பொறுப்பு அரசாங்கத்தாருக்கு உண்டென்பதையும் நன்கு உணர்ந்தார்கள். மேலும் அந்தந்த மதங்களின் பரிபாலனத்தில் தான் அக்கரை எடுத்துக் கொள்ளாமலிருந்தால் பிரஜை ஸம்பந்தமாக தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பொறுப்பை கை விட்டவர்களாகி விடுவோமென்பதையும் உணர்ந்தார்கள். இக்காலத்திலோ என்ருல், பிரஜைகளினுடைய மதங்கள் விஷயத்தில் தாங்கள் எவ்வித அக்கரையும் எடுத்துக் கொள்கிறதில்லை யென்பதுடன்கூட நிற்காமல், அவரவர்கள் மதாசாரப்படி நடந்து கொள்பவர்களை தர்ம

சாஸ்திர விதிகளை மீறும்படி கட்டாயப்படுத்தியும் மதத்திலுள்ள பற்றுதலினால் அவைகளை மீறத்தயா ரில்லாதவர்களை தண்டனைக்குள்ளாக்கியும் புதிது புதி தாக சட்டம்போடத் தலைப்படுகிறார்கள். இவ்விஷயம் ஆஸ்திகர் யாவருக்கும் மிகவும் துக்கத்தையும் கவலை யையும் கொடுக்கிறது. தர்ம ஸ்தாபனத்திற்கு உதவி யாக இருக்கவேண்டுமென்று ஸ்ரீ வித்யாரண்யர் பல விதமான லௌகிக ஸஹாயத்தைத் தேடி வைத்திருந் தும், அந்த ஸஹாயத்தை கொஞ்சம் கொஞ்சமாய் இப்பொழுதுள்ள ராஜ்ய நிர்வாஹிகள் குறைத்துவரும் ஸந்தர்ப்பத்தில், தேசத்திலுள்ள பிரஜைகளின் க்ஷேமத்தை யுத்தேசித்து அத்யாத்ம முறையில் செலுத்தி வரவேண்டிய செல்வாக்கு ஸ்ரீமடத்திற்கு குன்றாமலிருந்து வரவேண்டுமென்றால் அவ்வித ஸஹா யத்தைக் கொடுத்து பக்கபலமாயிருந்து மடத்தையும் அதன் மூலமாய் தங்களையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய பொறுப்பு பூராவும் தத்காலத்தில் பொது மக்களிடத்திலேயே இருந்து வருகிறது.

சிருங்கேரி ஜாகிர் நிர்வாஹம் ஸ்ரீமத் ஆசார்யா ரிடமே இருப்பதாகத்தான் சொல்லவேண்டும். ஆனால் அவர் ஸன்யாஸியாயிருப்பதால் ஏதேனும் அவசிய மான ஸந்தர்ப்பம் ஏற்பட்டாலொழிய லௌகிக நிர் வாஹத்தில் தலையிடுவது கிடையாது. தன்னுடைய கார்யங்களையும் அதிகாரங்களையும் ஒரு உத்யோகஸ்த ரிடம் பொறுப்பாய் விட்டுவிடுவதால் அவ்வுத்தியோ கஸ்தரே தான் வாஸ்தவத்தில் நிர்வஹிப்பவர் என்று

சொல்ல வேண்டியிருக்கிறது. பிரஜைகளுக்குள் சொத்துரிமை, குற்றம் செய்தல் முதலான ஸகல வியவஹாரங்களைத் தீர்த்து வைக்கவேண்டிய பொறுப்பு மைசூர் ஸம்ஸ்தானத்தையே சேர்ந்தது. தீர்வை வசூல் அதிகாரத்தை மாத்திரம் ஸ்ரீமடத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். சில வருஷங்களாக இத்தீர்வை வசூல் பொறுப்பைக்கூட மைசூர் ஸர்க்காரே வஹித்து அதற்காக தனியாக ஒரு உத்யோகஸ்தரை நியமித்திருக்கிறார்கள்.

வேதாந்த சாஸ்திரத்திலும், பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்திலும் மேல் கிரந்தங்களை போதிப்பதற்காக பங்களூரிலும் காலடியிலும் ப்ரௌட வித்யா சாலைகள் இருப்பதுடன், சிருங்கேரியிலேயே ஒரு அத்யயன பாடசாலையும் ஸம்ஸ்கிருத கலாசாலையும் ஸ்ரீமடத்தின் ஆளுகையில் நடந்து வருகின்றன. தவிரவும் சிருங்கேரிக்கு யாத்ரிகர்களாகவும் அதிதிகளாகவும் வரக்கூடியவர்களின் ஸௌகர்யத்தையுத்தேசித்து சில தர்மசாலைகளும் அதிதி கிருஹங்களும் இருந்து வருகின்றன. இவ்வித்யாஸ்தானங்களில் கொடுக்கும் வித்யாப்யாஸமும் ஆசாரப்பயிற்சியும் அத்யுத்கிருஷ்டமான ரீதியில் இருக்கும். தவிரவும் அப்யாஸ காலத்தில் எவ்விதமான கவலைகளும் வித்யார்த்திகளுக்கு ஏற்பட இடமன்னியில் எல்லாவிதமான ஸௌகர்யங்களும் செய்து கொடுக்கப்படுகின்றன. சிருங்கேரிக்கு ஸமீபத்தில் ரயில்வேஸ்டேஷன் கிடையாது. பீரூர், தரிக்கரே, ஷிமோகா, எதற்குப் போனாலும் அறுபது

மைலுக்குக் குறையாது. மேல் ஸமுத்திரக்கரையில் உள்ள மங்களூரிலிருந்து சுமார் எண்பத்தைந்து மைல் இருக்கும். அப்படியிருந்தும் இம்மார்க்கத்தின் எல்லா பக்கங்களிலும் ரமணீயமான பர்வதங்களும் பள்ளத் தாக்குகளும் மனோஹரமான தோற்றங்களுமே கண் களில் படுமானதினால் யாத்திரையில் சிரமம் தெரியாது, ஆனந்தமாகவேயிருக்கும். சிரமம் என்று வைத்துக் கொண்டாலும் கூட, யாத்திரையின் முடிவில் சிருங் கேரியின் அத்புதமான ஸன்னிவேசத்தை கண்ணாரக் கண்டு களித்து, ஸ்ரீ சாரதாதேவியின் கருணாகடாக்ஷத் திற்குப் பாத்திரமாகி, ஸ்ரீமத் ஆசார்யாரின் மந்தஸ்மித ரூபமான அனுக்ரஹத்தைப் பெற்றவுடன், புருஷார்த் தத்தை அடைய விரும்பும் யாவரும் இச்சிரமத்தை சிரமமாகப் பாராட்டாமல் தன்யரானோம் என்றே கருதுவார்கள்.

---

## அத்யாயம் 10

### சிருங்கேரி ஆலயங்கள்

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் ஆதியில் துங்கா நதியின் மத்தியிலுள்ள ஓர் பாறையின்மேல் யந்திர ஸ்தாபனம் செய்து சந்தனக்கட்டையில் ஓர் மூர்த்தி தயாரித்து ஸ்ரீ சாரதாம்பாளை பிரதிஷ்டைசெய்து மேல் ஆவரண மாக கூரைபோட்டுக் கொடுத்திருந்த ஆலயம் இப் பொழுது கருங்கல்லால் அதி மனோஹரமாய் விஸ்தார

மாக கட்டப்பட்டு சோபித்து வருகிறது. இப்பொழு துள்ள ஸ்வர்ண விக்ரஹத்தை ஸ்ரீ வித்யாரண்யர் தான் பிரதிஷ்டை செய்து, கோவிலுக்கு மேல் ஓடு பாவிக்கொடுத்தார். அக்கட்டிடம் கி. பி. 1907 வரை இருந்துவந்தது. அந்த ஸமயம் பீடத்திலிருந்த பூர்வா சார்யார் ஸ்திரமான கட்டிடம் கட்டிவிட வேண்டு மென்று ஸங்கல்பித்து வேலை நடந்துவரும் ஸமயம் அவர்கள் ஸித்தியாய் விட்டபடியால், அதை பூர்த்தி செய்யும் பொறுப்பு பின்வந்த ஸன்னிதானத்தையே சேர்ந்ததாகிவிட்டது. அப்படியே ஆலயத்தை பூரா வும் நிர்மாணம் செய்து அதி கோலாஹலத்துடனும் உத்ஸாஹத்துடனும் கி. பி. 1916ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அப்பொழுது மைஸூர் மஹாராஜா ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையாரவர்கள் நேரில் வந்திருந் தது அவ்வுத்ஸவத்திற்கு விசேஷ சோபையைக் கொடுத்தது. தென் பிரதேசங்களில் நாட்டுக் கோட்டை செட்டியார் கட்டும் ரீதியிலேயே கோவில் கட்டப்பட்டிருக்கிறது. கர்ப்பகிருஹமும் அதன் முன்னுள்ள சிறு மண்டபமும் அழகான இழைக்கப் பட்ட கருங்கல்லில் அமைந்திருப்பது மிகவும் ரமணீய மாயிருக்கிறது. இதற்கு முன் பக்கம் அத்புதமான சில்பத்துடன் கூடிய பெரிய பெரிய கல்தூண்களினுல் தாங்கப்படும் ஓர் விசாலமானதும் மனோஹரமானது மான மண்டபம் விளங்குகிறது. பிரதக்ஷிணத்திற் காக விஸ்தாரமான நடைபாதைகளும் இருக்கின்றன. கட்டிடம் அதிகமாக இல்லாத காரணத்தினுலேயே

பக்தர்களின் மனதை ஆவர்ஜிக்கக் கூடிய நிலமையில் அமைந்திருக்கிறது.

தவிரவும் வாசலுக்கு வெளியிலிருந்தபடியே அம்பாளின் தர்சனம் செய்யும்படியான ஸௌகர்யம் இருந்துவருகிறது. தூரவிருந்து பார்க்கக்கூடியதாக தென்தேசத்திலுள்ள ஆலய கோபுரங்களைப் போல இங்கு கோபுரம் கிடையாது. ஸ்ரீ சாரதாம்பாளின் மந்தஸ்மிதத்தையும் கருணு கடாக்ஷத்தையும் பிரஸன்ன முகத்தையும் பார்க்கும் யாரும் புல்லரித்து ஆனந்தபரவசமாகி விடுவார்கள். தான் எப்பொழுதும் இங்கிருந்து ஸாந்நித்யத்துடன், லோகானுக்ரஹம் செய்துவருவதாக ஸ்ரீ சங்கரபகவத்பாதரிடம் கொடுத்த வாக்கையனுஸரித்து, அம்பாள் இப்பொழுதும் ஸகலவிதமான பக்தர்களுக்கும் சிரத்தை பக்தி இவைகளைக் கொடுத்து பலவிதமான அனுக்ரஹம் செய்து வருவதுடன், அத்வைத நிலை எங்கும் பரவ வேண்டுமென்ற கருத்துடன் ஸ்ரீ சங்கரபகவத் பாதரால் ஸ்தாபிக்கப்பட்ட இப்பீடத்தின் நிர்வாஹத்தையும் அம்பாளே நடத்திவருகிருள். ஆதியில் பிரதிஷ்டை செய்யப்பட்டகாலம் முதற்கொண்டு சிருங்கேரீ பீடத்தை அலங்கரித்து வந்திருக்கும் மஹான்களால் மிகவும் பக்தி புரஸ்ஸரமாய் ஆராதிக்கப்பட்டு வந்திருப்பதால் ஸாந்நித்யம் ஜாஸ்தியாகவே ஏற்பட்டு அம்பாள் விளங்கி வருகிருள்.

இந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீசாரதாம்பாளின் மூர்த்தியைப்பற்றியும் சத்வத்தைப்பற்றியும் சில வார்த்தை

கள் சொல்வது மிகையாகாது. ஸ்ரீ சங்கரபகவத்பாதருடைய வேதாந்த உபதேசங்களை யொட்டியே இவையும் இருக்கின்றன. உண்மையாக பகவத் தத்வம் எத்தன்மையுள்ளதென்று விசாரிக்கும் கால், அதற்கு எவ்வித எல்லையும் கல்பிப்பது உசிதமாகாது. இதனுலேயே ஆண் பெண் என்ற வித்யாஸமுமிருக்க நியாயம் கிடையாது. நம்முடைய பழக்கத்தினுல் ஏற்பட்ட லோகவாஸனையினுல் தான் அத்தத்வத்தை 'அவன்' என்று சொல்கிறோம். இதற்குள்ள நியாயம் அதை 'அவள்' என்று சொல்வதிலும் உண்டு. இந்நியாயத்தை அனுஸரித்தே பரதத்வம் ஸ்ரீ சாரதாம்பிகையாகும். ஸகுணமான த்ரிமூர்த்திகளுக்கும், அவர்களுடைய சக்தி ஸ்வரூபிணிகளான ஸரஸ்வதி லக்ஷ்மீ ஈசுவரீ இவர்களுக்கும், அதீதமாயிருக்கும் தத்வமே ஸ்ரீ சாரதாம்பிகை. இவர்கள் எல்லாரும் அவரிடத்தில் அடங்கியுள்ளார்கள். ஆகையால் தான் சிருங்கேரீ ஆலயத்தில் ஸ்ரீ சாரதா தேவி தனித்திருக்கிருள். தேவியை விசேஷமாக ஆராதிக்கும் மற்ற கோவில்களில்கூட சக்திரூபமான தேவியை ஆளுகிற சக்திமான் என்ற முறையில் ஒரு சிவலிங்கத்தை அல்லது மற்ற மூர்த்தியைக் காண்கிறோம். ஸ்ரீ சாரதா சக்தி மாத்திரமல்ல, சக்திமானும் ஆவாள், என்கிற காரணத்தினுல் வேறு லிங்கம் மூர்த்தி இவைகளுக்கு எவ்வித அவசியமுமில்லாமலே யிருக்கிறது. பூர்வாசார்யார் ஸ்ரீ சாரதாம்பாளை ஸ்துதிக்கும்போது அவளையே ஸரஸ்வதியாகவும் ஈசுவரியாகவும் மற்றும்

பலவிதமாயும் வர்ணிப்பதுடன் த்ரிமூர்த்திகளினுடையவும் அவர்களின் சக்திகளினுடையவும் விசேஷணங்கள் யாவற்றையும் ஸ்ரீ சாரதாம்பாளுடையதாகவே சேர்த்துச் சொல்வதும் இக்காரணத்தினாலேயே ஸமஞ்ஜஸமாகும்.

ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்திற்கு அடுத்தபடியாக முன் பிரஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ வித்யாசங்கராலயமே பிரதானமாயுள்ளது. சிருங்கேரியின் மத்தியிலுள்ள குன்றின் மேல் இருந்துவரும் மலஹானிகரேசுவரர் ஆலயத்தைப் பற்றியும், நான்கு திக்தேவதைகளான பைரவர் ஹனுமான் துர்க்கா காளி இவர்களைப் பற்றியும் முன்னாலேயே பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாலயங்களெல்லாம் ஸாதாரணமான ஓட்டுக் கட்டிடங்கள். சிருங்கேரியில் மழை பனி வெய்யில் எல்லாம் அதிகமாகவே இருக்கக் கூடியதால் அதை யுத்தேசித்து இவ்விதம் கட்டப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீமடம் எல்லைக்குள் வேறு பலவித சிறு ஆலயங்களும் இருக்கின்றன. ஜனார்த்தனர் ஆலயம் வெகு பிராசீனமாக தெரிகிறது. பழய மடத்தின் மத்தியில் ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் ஆலயம் இருந்துவருகிறது. முன்னுள்ள ஆசார்யார்களின் ஸமாதி ஸ்தலங்களில் லிங்கங்களை பிரதிஷ்டை செய்து சிறு கோவில்கள் கட்டி ஆராதிக்கப்பட்டு வருகின்றன. ஸ்ரீ வித்யாரண்யர் ஹம்பிக்கு ஸமீபத்திலுள்ள விருபாக்ஷ க்ஷேத்திரத்திலும், இரண்டு மூன்று ஆசார்யர்கள் நாஸிக்

கிலும், ஸித்தியடைந்தபடியால் அவர்களின் ஸமாதி சிருங்கேரியில் இல்லை. ஸ்ரீ சங்கர பகவத்பாதருக்கு அடுத்தபடியாக யோக்கியதையிலும் பீடாதிபத்யத்திலும் மிகச் சிறந்து விளங்கின ஸ்ரீ ஸுரேசுவராசார்யாரின் ஸமாதி ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்திற்கு தென்புரம் இருந்துவருகிறது. சில ஸமாதிகள் எந்த எந்த ஆசார்யாருடையதென்று சொல்வதற்கு முடியாமலிருக்கிறது. மடத்து தஸ்தவேஜுகளையும் கணக்குகளையும் நன்கு பரிசோதித்தால் ஒருக்கால் சொல்ல முடியலாம். ஸமீபத்திலிருந்த ஆசார்யார்களின் ஸமாதிகள் விஷயத்தில் இந்த ஸந்தேஹத்திற்கு இடமில்லை. ஓர் அழகான சிறு கட்டிடத்தில் ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளின் ஸமாதியிருக்கிறது. அதற்கு இரு பக்கத்திலும் அவர்களுடைய பூர்வாசார்யார்களான அபிநவ ஸச்சிதானந்த பாரதீ, ஸச்சிதானந்தபாரதீ இவர்களுடைய ஸமாதிகள் இருக்கின்றன. ஸ்ரீஸச்சிதாநந்தசிவாபிநவ நரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் துங்கா நதியின் தென்கரையில் தனியாக ஏகாந்தமாக ஆசிரமம் கட்டி வஸித்து வந்ததால் அவர்களுடைய ஸமாதியும் அக்கரையிலேயே ஏற்பட்டு அவ்விடத்தில் ஓர் அழகான கல் கட்டிடமும் அதில் மஹாலிங்கம் பிரதிஷ்டையாயிருப்பதுடன் அமிருத சிலையில் ஒரு மூர்த்தியும் ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. அந்த ஆலயத்தையொட்டி அதேமாதிரியாகவே ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளின் ஆலயமும் கட்டப்பட்டு வருகிறது.

ஆலயங்களிலுள்ள மூர்த்திகளைத் தவிர, சிருங்கேரியில் ஆராதிக்கப்பட்டுவரும் இதர மூர்த்திகளைப் பற்றியும் பிரஸ்தாபிக்க வேண்டியது அவசியமாகும். காமேசுவரர், காமேசுவரீ, ராமர், கிருஷ்ணர், ஹனுமார், நடராஜர் முதலான அநேக மூர்த்திகள் இருக்கின்றன. பலவிதமான பாண லிங்கங்களும் ஸாலக்ராமங்களும் இருந்து வருகின்றன. ஆனால் எல்லா மூர்த்திகளிலும் பிராதான்யம், சந்திர மௌளீசுவரர், ரத்னகர்ப்ப கணபதி, ஸ்ரீசக்ரயந்திரம், ஸ்படிக மேருயந்திரம், ஸ்ரீசாரதாம்பிகை, ஸ்ரீ சங்கர பகவத்பாதர், இவர்களுக்குத்தான் இருந்து வருகிறது. சுத்த ஸ்படிகமாயிருக்கும் சந்திர மௌளீசுவர லிங்கத்தின் சிரஸ்ஸில் பளிச்சென்று வீசும் சந்திரகலையை வேறு எங்கும் பார்க்க முடியாது. இந்த லிங்கம் கைலாஸத்திலிருந்து கொண்டு வரப்பட்டு ஸ்ரீ விசுவேசுவரரால் காசி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ சங்கர பகவத்பாதரிடம் அனுக்ரஹித்துக் கொடுக்கப்பட்டதென்று சொல்கிறார்கள். இம்மூர்த்தியிடம் ஆசார்யார்கள் வைத்திருக்கும் விசேஷ பக்தியினாலேயே ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு இது எவ்வளவு தூரம் உதவுகிறதென்பது ஸ்பஷ்டமாகிறது.

ஒரு ஸமயம் ஸ்ரீ சந்திரமௌளீசுவர லிங்கத்தின் மேலுள்ள தங்க கவசத்திற்கு ஆசைப்பட்டு ஒரு திருடன் இம்மூர்த்தியை எடுத்துக் கொண்டு போனபோது பூர்வாசார்யார் மூன்று நாட்களுக்கு மேலாக பிராயோபவேசமிருந்து பின்னால் லிங்கம் திரும்பக்

கிடைத்த பிறகே பிக்ஷை யெடுத்துக் கொண்டார்கள். வைசாகத்தில் சங்கர பகவத்பாதருக்கு சங்கர ஜயந்தி மஹோத்ஸவமும், கணபதிக்கு விநாயக சதுர்த்தி உத்ஸவமும், சாரதாம்பாளுக்கு நவராத்திரி உத்ஸவமும் விமரிசையாக நடக்கும். சிருங்கேரியிலுள்ள பகவந் மூர்த்திகள் ஒவ்வொன்றும் மிகவும் சிலாக்யமானதேயானாலும், ஸாமான்ய ஜனங்கள் சிருங்கேரி க்ஷேத்திரத்திற்கு ஆகர்ஷிக்கப்படுவது சாரதாம்பாளுடைய தர்சனத்தினாலும் சந்திரமௌளீசுவரரின் வைபவத்தினாலும் ஸ்ரீமத் ஆசார்யாரின் அதிபாவனமான கருணா கடாக்ஷத்தினாலும் என்று சொல்வது உசிதமேயாகும்.

இப்பீடத்தில் அமர்ந்து ஆசார்யஸ்தானம் வஹித்துவரும் ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் என்ற மஹான் "வெகுகாலம் தன்னுடைய தேஜஸ்ஸினாலும் அனுக்ரஹத்தினாலும் உலகத்திலுள்ள யாவர்களையும் உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டும்" என்றே எல்லா சிஷ்யர்களுடைய தீவிரமான பிரார்த்தனை.

जयतु जयतु नित्यं चन्द्रमौलिर्महेशो
जयतु जयतु नित्यं शारदाऽभीष्टदात्री ।
जयतु जयतु नित्यं शंकरो देशिकेन्द्रो
जयतु जयतु नित्यं चन्द्रचूडो गुरुर्नः ॥

॥ शुभमस्तु ॥

---

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீ ஜகத்குரு பரம்பரை.

| லக்கம் | | பெயர் | ஸந்யாஸம் கி. பி. | முக்தி கி.பி. | பீடாதிபத்யம் காலம் |
|---|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீ | சங்கரபகவத்பாதாசார்யார் | — | — | — |
| 2. | ,, | ஸுரேசுவராசார்யார் | — | 773 | — |
| 3. | ,, | நித்யபோதகனாசார்யார் | 757 | 848 | 75 |
| 4. | ,, | ஞானகனாசார்யார் | 846 | 910 | 62 |
| 5. | ,, | ஞானோத்தமாசார்யார் | 905 | 953 | 43 |
| 6. | ,, | ஞானகிரியாசார்யார் | 949 | 1038 | 85 |
| 7. | ,, | ஸிம்ஹகிரியாசார்யார் | 1036 | 1098 | 60 |
| 8. | ,, | ஈசுவர தீர்த்தர் | 1097 | 1146 | 48 |
| 9. | ,, | நரஸிம்ஹ தீர்த்தர் | 1146 | 1228 | 82 |
| 10. | ,, | வித்யாசங்கர தீர்த்தர் | 1228 | 1333 | 105 |

| 11. | ஸ்ரீ பாரதி கிருஷ்ண தீர்த்தர் | 1328 | 1380 | 47 |
|---|---|---|---|---|
| 12. | ,, வித்யாரண்யர் | 1331 | 1386 | 6 |
| 13. | ,, சந்திரசேகர பாரதி I | 1368 | 1389 | 3 |
| 14. | ,, நரஸிம்ஹ பாரதி I | 1387 | 1408 | 19 |
| 15. | ,, புருஷோத்தம பாரதி I | 1406 | 1448 | 40 |
| 16. | ,, சங்கரானந்த பாரதி | 1428 | 1454 | 6 |
| 17. | ,, சந்திரசேகர பாரதி II | 1449 | 1464 | 10 |
| 18. | ,, நரஸிம்ஹ பாரதி II | 1464 | 1479 | 15 |
| 19. | ,, புருஷோத்தம பாரதி II | 1472 | 1517 | 38 |
| 20. | ,, ராமசந்திர பாரதி | 1503 | 1560 | 43 |
| 21. | ,, நரஸிம்ஹ பாரதி III | 1557 | 1573 | 13 |
| 22. | ,, நரஸிம்ஹ பாரதி IV | 1563 | 1576 | 3 |
| 23. | ,, நரஸிம்ஹ பாரதி V | 1576 | 1599 | 23 |
| 24. | ,, அபிநவ நரஸிம்ஹ பாரதி I | 1599 | 1622 | 23 |
| 25. | ,, ஸச்சிதானந்த பாரதி I | 1622 | 1663 | 41 |

| 26. | ,, | நரஸிம்ஹ பாரதீ VI | 1663 | 1705 | 42 |
|---|---|---|---|---|---|
| 27. | ,, | ஸச்சிதாநந்த பாரதீ II | 1705 | 1741 | 36 |
| 28. | ,, | அபிநவ ஸச்சிதாநந்த பாரதீ I | 1741 | 1767 | 26 |
| 29. | ,, | அபிநவ நரஸிம்ஹ பாரதீ II | 1767 | 1770 | 3 |
| 30. | ,, | ஸச்சிதானந்த பாரதீ III | 1770 | 1814 | 44 |
| 31. | ,, | அபிநவ ஸச்சிதாநந்த பாரதீ II | 1814 | 1817 | 3 |
| 32. | ,, | நரஸிம்ஹ பாரதீ VII | 1817 | 1879 | 62 |
| 33. | ,, | ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ | 1866 | 1912 | 33 |
| 34. | ,, | சந்திரசேகர பாரதீ III | 1912 | 1954 | 42 |
| 35. | ,, | அபிநவ வித்யா தீர்த்தர் | 1931 | — | — |

॥ शुभमस्तु ॥



